॥ श्रीः ॥

# सदाचारस्मृतिः

श्री आनन्द - तीर्थ - भगवत्पादाचार्य - विरचिता

# ஸதாசார-ஸ்ம்ருதி:

ஸ்ரீ ஆனந்த தீர்த்தர் இயற்றி அருளியது

# SADAACHARA SMRITI

**Tamil rendering by**

*Srimushnam* **V. Nagarajachar**

Srirangam

Based on Kannada rendering

By

*Darshanaratna*, Prof. **K T. Pandurangi**

Bangalore-11

1993

॥ श्रीः ॥

# सदाचारस्मृतिः

श्री आनन्द - तीर्थ - भगवत्पादाचार्य - विरचिता

# ஸதாசார-ஸ்ம்ருதி:

ஸ்ரீ ஆனந்த தீர்த்தர் இயற்றி அருளியது

# SADAACHARA SMRITI

**Tamil rendering by**

*Srimushnam* **V. Nagarajachar**

Srirangam

Based on Kannada rendering

By

*Darshanaratna*, Prof. **K. T. Pandurangi**

Bangalore-11

1993

# SADAACHARA SMRITI

Text in Sanskrit and Tamil
Translated in Tamil By
*Srimushnam* V. Nagarajachar
Pages: viii+72

**Price Rs. 9/-**

**Copies can be had from**

1. Poorna Prajna Vidya Peetam
   Poorna Prajna Nagar, BANGALORE - 560 028.

2. Sri V. Nagarajachar,
   Devara Nama Bhajana Sangha
   68, A. M. Road, SRIRANGAM - 620 006.

*Published By*

**Sri Madhwa Jayanti Pratishtana**
**Poorna Prajna Vidya Peeta,**
**Poorna Pragna Nagar, Bangalore-28.**

|| श्रीः ||

# FOREWORD

**His Holiness SRI VISHWESHATIRTHA SWAMIJI**
SRI PEJAVARA MUTT
JAGADGURU MADHWACHARYA SAMSTHANA
**UDIPI - 576101, South Kanara**

---

Sadachara Smriti is a small but a very valuable treatise instructing every pious person about his daily religious routine. Right from the early morning - prayer upto the remembering of God while going to the bed, all religious duties such as Sandhya, Puja. Vaisvadeva etc., are briefly and graphically described here. It is composed by Sri Madhvacharya himself by selecting the verses from Sri Vedavyasa's works. Therefore, it is a holy work for Parayana and Anushtana.

We are glad that this work is translated in Tamil by Sri Nagarajachar and published in Sri Madhva Jayanthi Book series May H a r i Vayu Gurus bless the translator and the readers of this book.

SRI VISHWESHA TIRTHA
Swamiji of Pejawara Matha.

॥ श्रीः ॥

# PREFACE

It so happens, at times, in the life an easy-going sensitive human being when, shaken by his own **Duraachara** and aimless existence, he asks himself a question, 'has life any purposeful meaning, or is it just to be lived in a mechanical way till the end?' This hunger for spiritual enlightenment and inner elevation drives man from Guru to Guru and from temple to temple.

The merciful Sri Madhwa offers us an ideal option for **Sadaachara,** a rewarding way of life, designed to silence the noisy mind and to gain 'Inner satisfaction'. The urgent need in life is to discipline the mind and make it turn towards the Lord. This is the secret for success in life and for happy existence. And this is exactly what we find in this small work **SADAACHARA SMRITI** of Sri Madhwa.

**MEANING OF THE TITLE:** Aachara means a set pattern of life-style; i.e., a habitual way of life. A particular life-style designed to bring happiness in the present life and also in future life is **Sadaachara.** And the work that puts the recommended method into our mind is **'SADAACHARA SMRITI'.**

**MANGALAKARA:** This is an auspicious work, i.e., Mangalakara. Sri Acharya Himself mentions this as **SHUBHA** in Sloka 41. A sudden thought of Sri Hari coming to the mind at the commencement of a good work is auspicious. Since this work recommends us to involve Sri Hari in whatever good work we do from morning till night, this is a Mangalakara Grantha or an auspicious work.

**ACKNOWLEDGEMENTS**

I remain ever grateful to **Sri Sri Viswesha Tirtha Swamiji of Sri Pejawar Mutt** Udupi for His Holiness giving me an opportunity to render this sacred work in Tamil and thereby render a small Seva to Acharya Sri Madhwa and to the Lord Sri Madhava. His Holiness is very keen to bring out a series of books in Tamil on Dwaita Vedanta.

I am indebted to the great and reputed Scholar ***Darsana Ratna, Meemaamsa Bhooshana,*** **Prof. K.T. Pandurangi,** Vidwan, Siromani, M.A., Bangalore who helped me with his Kannada translation of 'Sadachara Smriti'. The Tamil translation is based on his book published in the year 1978 by Sri Raghavendra Seva Samiti, 4th Block T., Jayanagar, Bangalore-11

My thanks are due to Sri **V.Sarangapani,** B.A.B.L., Advocate, Madurai, the dynamic personality in the Tamil Nadu Branch of the A.B.M.M. Mandal who is taking keen interest in bringing out Tamil Publications on Sri Madhwa Shastra.

An English translation of this work by me was published in 1974, by **Sri Madhwa Jayanti SUBBA RAO** (adorable father of Sri S.K. Moorthy, I.O.C. Madras-4). It was published in commemoration of Sri Madhwa Jayanti Golden Jubilee Celebrations, Madras. A few points from that work have been incorporated in this book.

In all humility, I offer this work as a Tulasi-Dala at the feet of the Lord Sri Krishna.

68, A.M. Road,
SRIRANGAM
620 006
25.1.1993

*Srimushnam* **V. Nagarajachar,**
Managing Editor "SRI MADHWA SIDDHANTA" & Councillor, Sriman Madhwa Siddhantonnahini Sabha, Tiruchanur, TIRUPATI.

# முன்னுரை ★

*Darshana Ratna, Meemamsa Bhooshana,*
Prof. K.T. Pandurangi, Vidwan, Siromani, M.A.,
132,/IV, III Block, Jayanagar, Bangalore-11

ஆசார்ய ஸ்ரீ மத்வர் இயற்றி அருளிய முப்பத்திஏழு கிரந்தங்களில் 'ஸதாசார ஸ்ம்ருதி', நித்ய அனுஷ்ட்டானங் களை போதிக்கும் நூல். நித்திய அனுஷ்ட்டானங்களை எந்த நோக்குடன் செய்யவேண்டும் என்பதை போதிப்பதே இந்நூ லின் முக்கிய உத்தேசம். பகவானே முக்கிய கர்த்தாவாக நின்று, எல்லாவற்றையும் செய்விக்கிறான். அவனது பூஜா என்று நினைத்தவண்ணம் அவரவர்க்கு உகந்த எல்லாக் கர்மாக்களையும் செய்தல் வேண்டும். புரிந்த செயல்களை யெல்லாம் அவனுக்கு ஸமர்ப்பணம் செய்யவேண்டும் என்னும் உள்ளுணர்வைத் தேடித் தருவதே இந்நூலின் நோக்கமாகும்.

பாகவத தர்மத்தை நடைமுறையில் கொண்டுவர, ஆசார அனுஷ்ட்டானம் அடிப்படை அஸ்திவாரம் ஆகும். வேதம், இதிஹாஸம், புராணம் இவற்றின் வாக்கியங்களை மேற்கோள் காண்பித்து ஆசார அனுஷ்ட்டானத்திற்கு வழி காட்டுகிறது 'ஸதாசார ஸ்ம்ருதி' என்னும் இந்நூல். **'தந்த்ர ஸாரம்'** என்னும் நூலில் ஸ்ரீ மத்வர் பூஜா முறைகளையும், மந்திரங்கள் அவற்றை ஜபிக்கும் முறை இவற்றை விளக்கி யுள்ளார். ஆனால் **'ஸதாசார ஸ்ம்ருதி'**யில், நாம் கடைப் பிடித்துச் செய்யவேண்டிய அன்றாட வாழ்க்கை

---

* Prof. பாண்டுரங்கி அவர்களின் கன்னட புத்தகத்திலுள்ள 'பீடிகை'யின் சுருக்கம்.

முறைகளை உபதேசித்திருக்கிறார். **'கிருஷ்ணாம்ருத மஹார்ணவம்'** என்னும் மற்றொரு நூல் பகவத்-பக்தி, பகவத்-ஸமர்ப்பணம், மேலும் ஏகாதசி உபவாஸ மஹிமை இவற்றை போதிக்கின்றது.

ஸ்ரீ ஆனந்த தீர்த்தர் என்னும் ஸ்ரீ மத்வர் வெறும் மத ஸ்தாபகர் அல்லர். அவர் தர்ம ஸ்தாபகர். மிகப் புராதன காலத்திலிருந்து நடைமுறையில் இருந்து வந்த பாகவத தர்மம், மற்றும் த்வைத ஸித்தாந்தம் இவற்றிற்கு மறும லர்ச்சி அளித்தவர்.

ஸ்ரீ ஆசார்யர் தமது கருத்துக்களைக் கூறும்போது அவற்றிற்கு ஆதாரம் வேதம் என்பதை இடைவிடாமல் சுட்டிக்காட்டுவர். ஆதார வசனங்கள், பிரமாண வாக்கியங் கள் எனப்படும். ஸ்ரீ மத்வர் பிரமாண வாக்கியங்களைக் கொண்டே தமது கருத்துக்களை உபதேசிக்கும் முறையை அவரது எல்லா நூல்களிலும் காணலாம். அம்முறையில், 41 சுலோகங்களைக் கொண்ட 'ஸதாசார ஸ்ம்ருதி'யில் 16 சுலோகங்கள் ஆதார வசனங்கள் அல்லது பிரமாண வாக்கி யங்கள். இவை புருஷ-ஸூக்தம், பகவத் கீதை, மற்றும் பாகவதம் இவற்றிலுள்ள அதே வாக்கியங்கள். இவற்றை ஆங்காங்கு மேற்கோள் காண்பித்து, தமது கருத்துக்களை உபதேசித்திருக்கிறார் ஸ்ரீ ஆனந்ததீர்த்தர்.

மற்றொரு நோக்குடன் இந்நூலைப் பரிசீலித்தால், இருபது சுலோகங்கள் மட்டுமே அனுஷ்ட்டான முறைக ளைத் தருகின்றதையும், மிகுந்த இருபத்தோரு சுலோகங்கள் நாராயணன் ஸர்வோத்தமன் என்பதை நிலைநாட்டி, அவனே முக்கிய கர்த்தா, அவனது ஆணையினால், அவனது பூஜா ரூபமாகவே அனைத்துச் செயல்களையும் புரியவேண் டும். புரிந்த செயல்களை அவனுக்கு அர்ப்பணம் செய்ய

வேண்டும் என்னும் தெய்வீக நோக்கத்தைப் போதிப்பதைக் காணலாம்.

கர்மானுஷ்ட்டானங்களை இருபதே சுலோகங்களில் கூறியிருப்பினும், அவற்றில் வெகு முக்கியமான அம்சங்களையெல்லாம் உபதேசித்திருக்கிறார். இங்கு கூறப்பட்ட அனுஷ்ட்டானங்கள், அதிகாலையில் தேவ, குரு இவர்களின் நினைவு, உடற்தூய்மை, உள்ளத் தூய்மை, பல் துலக்கல், மிருத்திகா ஸ்னானம், ஜல-ஸ்னானம், தர்ப்பணம், அகமர்ஷண ஜபம், ஸந்த்யா-வந்தனம், காயத்ரீ ஜபம், தேவபூஜை, வைச்வதேவ, பலிஹரண, போஜனம், வேத-சாஸ்திரப் பயிற்ச்சி, மாலை ஸந்த்யா, தூக்கம், இரவில் ஸ்ரீ ஹரியின் நினைவு. இந்த எல்லா அனுஷ்ட்டானங்களின் முக்கிய அம்சங்களை சுருக்கமாக இந்நூலில் கூறியுள்ளார்.

## இன்றைய வாழ்க்கைக்குப் பொருந்துமா?

ஸதாசார ஸ்ம்ருதியில் உபதேசிக்கப்பட்ட அனுஷ்ட்டானங்கள் இன்றைய வாழ்க்கைக்குப் பொருந்துமா? இன்றைய வாழ்க்கையில் இது சாத்தியமா? அப்படி சாத்தியமில்லாமலும் பொருத்தமில்லாமலும் போனால், இப்பேற்பட்ட நூல்களைப் பயிலுவதினால் என்ன பயன்? என்னும் கேள்விகள் புறப்படுவது இயற்கை. வைச்வதேவ, பலிஹரணத்திற்கு நேரம் ஏது? இப்படி, இங்கு கூறப்படும் ஸதாசாரங்கள் அனைத்தும் இந்த யுகத்தில் சாத்தியமில்லை என்று தோன்றுவது இயற்கை. ஆனாலும் இரண்டு நோக்குகளுடன் ஸதாசாரங்களைத் தெரிந்து கொள்ளுதல் பயனுள்ளதாக இருக்கிறது.

(1) முதலாவதாக, இந்த ஸதாசாரத்தை நடைமுறையில் செய்துவந்த நமது முன்னோர்கள் எவ்வளவு தூய்மையுடன்

வாழ்ந்தனர், எவ்வளவு பவித்ரமான மனோபாவங்களைக் கொண்டிருந்தனர். அன்றைய சூழ்நிலையில் கூட எவ்வளவு கடின வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர் என்பதைப் புரிந்துகொண்டு, இன்றைய சூழ்நிலையில், அனுசரிப்பதற்கு எவ்வளவு சாத்தியமோ, அதையேனும் மேற்கொள்ளவேண் டும் என்னும் மனநிலையை அடைவது இந்நூலைப் பயில்வ தினால் உண்டாகும் முக்கிய பயன். உடல்தூய்மை மற்றும் மனத்தூய்மையை இயன்றவரை காப்பாற்றிக் கொள்வதும், அன்றாட வாழ்க்கையில் சோம்பேறித்தனத்தை விலக்கிக் கொள்வதும் இந்நூலின் முதல் பயன் ஆகும்.

*(2) இரண்டாவது பயன்:* கால தர்மத்தை அனுசரித்து அக்காலத்திலேயே கூறிய உபாயங்களை இக்காலத்தில் இயன்றவரை மேற்கொள்வது இரண்டாவது பயன். உதார ணமாக, நாம் இப்போது செய்யும் ஸ்நானம், அழுக்குப் போவதற்காகச் செய்யும் வெறும் மல-ஸ்நானம். அதாவது ஸங்கல்பம் போன்ற முறைகள் ஏதும் இல்லாமல் உடலை மட்டும் அலம்பும் வெறும் குளியல். இதோடு, ஸதாசார ஸ்ம்ருதியில் கூறிய 'தியான ஸ்நான'த்தைச் சேர்த்துக் கொண்டால், உடற்தூய்மையோடு உள்ளத் தூய்மையும் பெற்றுப் பயன் அடையலாம். அதேபோல அக்னியில் வைச்வதேவ ஆஹுதி கொடுக்க இயலாதவர்கள், அதிதி, வியார்த்தி, ஸாத்விக ஏழை இவர்களில் எவருக்கேனும் அன்னம் அளித்தால் வைச்வதேவத்தின் பலன் கிட்டுகிறது என்பதை இந்நூல் அறிவுறுத்துகிறது.

இப்படி தர்ம சூக்ஷ்மங்களைத் தெரிந்துகொண்டால், இயன்றளவு அதனை அனுசரிப்பது எக்காலமாயினும் சாத்தி யமே என்பதை உணரலாம். மேலும், ஸதாசாரம் இரண்டு வகை என்பதை இந்நூல் போதிக்கின்றது. தேஹத்தினால்

நாம் மேற்கொள்ளும் நற்செயல்கள் ஒரு வகை ஸதாசாரம். அச்செயல்களைப் புனிதப்படுத்திப் பயனுள்ளதாக ஆக்குவது மானஸிக ஸதாசாரம். 'நான் செய்கிறேன்' என்னும் அஹங்காரத்தை நீக்கி, ஈசன் செய்விக்கின்றான், ஈசனுக்கே அர்ப்பணம் செய்கிறேன் என்னும் உள்ளுணர்ச்சியே மானஸிக ஸதாசாரம். இது உள்ளத்தைப் புனிதமாக்குகிறது. இதை அனுசரிப்பதில் இன்றைய கால நிலை ஒரு போதும் குறுக்கே நிற்பதில்லை.

ஆகையினால், இப்பேற்பட்ட மானஸிக ஸதாசாரத்தை போதிக்கும் இம்மாதிரியான நந்நூல்கள் இக்காலத்திலும் கூட உபயோகப்படுபவையே ஆகும்.

---

# பொருளடக்கம்

|| श्री : ||

# || सदाचारस्मृति : ||

## ஸதாசார ஸ்ம்ருதி :

### ஆசார்ய ஸ்ரீமத்வர் அருளியது.

यस्मिन् सर्वाणि कर्माणि संन्यस्य अध्यात्म चेतसा ।
निराशी: निर्ममो याति परं जयति सोऽच्युत : ॥ (१)

**1. யஸ்மின் ஸர்வாணி கர்மாணி ஸன்யஸ்ய அத்யாத்ம - சேதஸா |**
**நிராசி: நிர்மமோ யாதி பரம் ஜயதி ஸோ(அ)ச்யுத : ||**

**'ஜயதி அச்யுத:'** என்று மங்களகரமான இந்த நூலைத் துவக்குகிறார் ஆசார்ய ஸ்ரீ ஆனந்த தீர்த்தர். மூவ்வுலகத்திலும் அந்த அச்யுதனே ஜெயிப்பவன், உயர்ந்தோன், ஸர்வோத்தமன்.

அஹங்காரம், பேராசை போன்ற மனத் தீய்மைகளை நீக்கி, எல்லா நற்காரியங்களையும் எவருக்கு அர்ப்பணம் செய்ய வேண்டுமோ, அந்த நாராயணனே மூவுலகிலும் உயர்ந்தோன், ஸர்வோத்தமன் என, போற்றிப் பாடுகிறார் இந்த மங்களாசரண சுலோகத்தில் ஸ்ரீஆசார்யர்.

**நிராசி:** = விஷ்ணுபக்தியை விட்டு வேறு ஆசைகளை நீக்கியவனாக. **நிர்மம:** = நான் செய்தேன் என்னும் அஹங்கா ரத்தை விட்டவனாக. **அத்யாத்ம சேதஸா** = அனைத்து உலகிலும் உயர்ந்தோன் ஸ்ரீ நாராயணன் ஒருவனே

முக்கிய கர்த்தா, அனைத்து ஜீவர்களையும் ஊக்குவிப்பவன் என்னும் நிச்சய புத்தியினால் **ஸர்வாணி கர்மாணி** = பரமாத்மனின் பிரேரணை அல்லது இயக்கும் சக்தியினால் நாம் செய்யும் எல்லா கார்யங்களையும். **யஸ்மின் ஸன் யஸ்ய** = எந்த அச்சுதனுக்கு அர்ப்பணம் செய்து, நல்லோர்கள், **பரம்** = தமக்கு உரிய பூர்ண அறிவைப் பெற்று, பூரணன் ஆகிய பரமாத்மனை, **யாதி** = அடைவார் கள். **அச்யுத:** = எத்தேசத்திலும், எக்காலத்திலும், எல்லா கல்யாண குணங்களாலும் உயர்ந்தோன் எவனோ அவனே 'அச்யுதன்'; அவனே குணபரிபூரணன், தோஷ வாஸனை கூட இல்லாதவன், ஸர்வோத்தமன். **ஜயதி** = ஜய சீலனாக விளங்குகிறான், அனைத்து உலகிலும் உயர்ந்தோனாக இருப்பவன் (ஸர்வோத்தமன்).

**அத்யாத்மா**= ஆத்மா என்றால் இங்கு ஜீவன். அவ னுக்கு அதிகாரி அல்லது அவனை இயக்குபவன், பர மாத்மா. அவனே 'அத்யாத்மா'. இவனை மனதில் கொண்டு, அதே விழுப்புணர்ச்சி இருத்தல் = **அத்யாத்ம சேதஸா.**

**ஆத்மா** = சரீரத்திலிருக்கும் பரமாத்மா 'ஆத்மா'. 'அதி' என்றால் அவனைக் குறித்து. **சேத:** = மனத்தினனாக அல்லது பரமாத்மனை மனத்தில் கொண்டவனாக என்பது பொருள்.

**'பரம் யாதி'** என்பதை இருமுறை பொருள் கூற வேண்டும். (1) தனக்கு உரிய பூரண அறிவை அடைகிறான். (2) பூரணனான பரமாத்மனை அடைகிறான்.

## கர்ம ஸன்யாஸம்

கர்ம - ஸன்யாஸம் என்பது இந்த சுலோகத்தில் முக்ய விஷயம். 'செய்பவன் நான் அல்ல' என்று மனத்தினால் விலகியவனும், செய்-பலனில் தன்னுரிமை விட்டவனும் கர்ம-ஸன்யாஸி ஆவான். அதற்கு வழி-முறையை ஸ்ரீ

ஆசார்யர் ''கீதா தாத்பர்ய'' என்னும் நூலில் இவ்வாறு அறிவூட்டுகிறார்.

नाहं कर्ता हरि : कर्ता तत्पूजा कर्म-च-अखिलम्।
तथापि मत्कृता पूजा त्वत्प्रसादेन नान्यथा।। (गीता तात्पर्ये)

**நாஹம் கர்த்தா ஹரிக் கர்த்தா தத்-பூஜா கர்ம-ச-அகிலம்|**
**ததாபி மத்-க்ருதா பூஜா த்வத் ப்ரஸாதேன ந-அன்யதா||**

உண்மை கர்த்தா நான் அல்ல. ஸ்ரீ ஹரி. எவற்றை எல்லாம் நான் செய்தேனோ, அவையனைத்தும் அவனுக்குச் செய்த பூஜையாகும். ஓ, பிரபுவே, நான் உன் பூஜையைச் செய்தபோதிலும், அதற்கும்கூட உனது அருள்தான் காரணம். வேறு காரணம் இல்லை.

மேற்கூறிய உட்கருத்தை உணர்ந்து எவன் செயலில் ஈடுபடுகிறானோ, அவனே கர்ம-ஸன்யாஸி என்று உபதேசிக்கிறார் ஸ்ரீ ஆசார்யர் முதல் சுலோகத்தில்.

### சுலோகம் - 2 (ஆசமனம், ஸ்நானம்)

२. स्मृत्वा विष्णुं समुत्थाय कृत-शौचो यथाविधि।
धौत-दन्त: समाचम्य स्नानं कुर्यात् विधानत:।। (२)

**2. ஸ்ம்ருத்வா விஷ்ணும் ஸமுத்தாய க்ருத சௌசோ யதா விதி|**
**தௌத-தந்த: ஸமாசம்ய ஸ்நானம் குர்யாத் விதானத:||**

விவேகியானவன் காலையில் விஷ்ணு-மனத்தினனாகப் படுக்கைவிட்டு எழுந்திருக்கிறான். காலைக் கடமைகளை முடித்து, பரமாத்மாவின் பெருமைகளை எடுத்துரைக்கும் கஜேந்திர மோக்ஷம் போன்ற ஸ்தோத்திரங்களைப் பாடுகிறான். சாஸ்திரத்தில் விதித்த முறைப்படி ஸ்னானங்கள்

முடித்துக் கொள்கிறான். ஆசமனம், ஸ்நானம் இரண்டும் இங்கு முக்ய விஷயங்கள்

**விஷ்ணும் ஸ்ம்ருத்வா** = அதிகாலையில் ஸ்ரீ விஷ்ணுவை நினைத்து. **ஸமுத்தாய** = படுக்கையிலிருந்து எழுந்து **விஷ்ணும் ஸம்ருத்வா** = கஜேந்த்ர. மோக்ஷம், ததிவாமன ஸ்தோத்திரங்களில் கூறியவாறு பரமாத்மனை நினைத்து, லக்ஷ்மீ, பிரம்மா, குருகளையும் மனத்தில் கொண்டு, **யதா விதி க்ருத சௌச:** = சாஸ்திரங்களில் நியமித்த படி உடம்பை சுத்தம் செய்து கொண்டு **தொளத-தந்த:** பல்துலக்கி, **ஸமாசம்ய** = ஆசமனம் செய்து. **விதானத:** சாஸ்திரத்தில் நியமித்தவாறு, **ஸ்னானம் குர்யாத்** = ஸ்னானம் செய்யவேண்டும்.

## ஆசமனம்

கிழக்கு அல்லது வடக்கு திக்கு நோக்கியே ஆசமனம் செய்ய வேண்டும். கால் அலம்பி, பாக்கியுள்ள நீரை ஆசமனம் செய்யலாகாது. மேலும், செருப்பு அல்லது தொப்பி அணிந்தவாறு ஆசமனம் செய்யலாகாது. மருந்து உட்கொண்ட உடனேயோ அல்லது தாம்பூலம் வாயிலிருக்கும்போதோ ஆசமனம் கூடாது. உள்ளங்கையை பசுவின் காதுபோல மடக்கி, கடைசீ மூன்று விரல்களைச் சேர்த்து, ஆள்காட்டிவிரலை உயர்த்தி, அதனை கட்டை விரலால் அணைத்தவாறு, ஒரு உளுந்து மூழ்குவதற்கு மட்டும் போதுமான நீரைக் கையில் கொண்டு ஒருமுறை உட்கொள்வது. இதே போல மும்முறை உட்கொள்வதே ஆசமனம் ஆகும். கேசவாய ஸ்வாஹா, நாராயணாய ஸ்வாஹா, மாதவாய ஸ்வாஹா என்று மும்முறை ஆசமனம். சப்தம் செய்து உறுஞ்ஜக் கூடாது.

ஆசமனம் மூன்று விதம். (1) ஸ்மார்த்த ஆசமனம் (அதாவது ஸ்ம்ருதிகளை அநுசரித்து) (2) மந்த்ர ஆசமனம், (3) வைஷ்ணவ ஆசமனம். காயத்ரீ மந்த்ரத்தின் ஒவ்வொரு

பாதத்தையும் உச்சரித்து மூன்று பாதத்திற்கு மூன்று ஆசமனம். இது ஸ்மார்த்த ஆசமனம். (2) ருக்வேதாய ஸ்வாஹா, யஜுர்வேதாய ஸ்வாஹா, ஸாம வேதாய ஸ்வாஹா என்று செய்வது மந்த்ர ஆசமனம். (3) கேசவாய ஸ்வாஹா, நாராயணாய ஸ்வாஹா, மாதவாய ஸ்வாஹா என்று செய்வது வைஷ்ணவ ஆசமனம். இவற்றில் வைஷ்ணவ ஆசமனம்தான் எல்லா இடங்களிலும் வழக்கத்தில் வந்திருக்கிறது. மற்றவை, விசேஷ சந்தர்பங்களில் மட்டுமே உபயோகத்திலிருக்கிறது.

உள்ளங்கையில், ப்ரஜாபதி, பித்ரு, பிரம்மதேவ, ஸௌம்ய, அக்னி என்னும் தீர்த்தங்கள் உள்ளன. உள்ளங்கையின் வெவ்வேறு பகுதிகளுக்கு இப்பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

कनिष्ट देशिन्यं अंगुष्ठ मूलान्यग्रस्य च। प्रजापति पितृ ब्रह्म देवतीर्थानि अनुक्रमात्। करमध्ये सौम्यं अग्नितीर्थं च।

ஆசமனம் செய்யும்போது ப்ராஹ்ம்ய (பிரம்ம) தீர்த்தத்தினால் செய்ய வேண்டும். முதன்முறையாக அன்னப்ராசனம் செய்விக்கும்போது 'ஸௌம்ய' தீர்த்தத்தினால் செய்விக்க வேண்டும். 'ஆக்னேய' (அக்னி) தீர்த்தத்தினால் தானம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

'கேசவாய ஸ்வாஹா' என்று மும்முறை ஆசமனம் செய்தபிறகு உள்ளங்கையை அலம்பி, வலது காதை தொட்டுக்கொள்ளவேண்டும். பிறகு உதடு, மூக்கு, தலை முதலான பகுதிகளை அந்தந்த நாமாக்களை உச்சரித்து, தொட்டுக் கொள்வது. ஒரு கர்மாவைத் தொடங்கும்போது செய்யும் ஆசமனத்தைத் தவிர, தும்முதல், வாய் கொப்பளித்தல், படுத்து எழுந்திருத்தல் இவற்றிற்குப் பிறகும் ஆசமனம் உண்டு. அப்போது நீர் கிடைக்காவிடில், வலது காதை மூன்று தடவை தொட்டு மூன்று நாமாக்களை உச்சரித்து

''ஸ்வாஹா'' என்று சொல்ல வேண்டும். இதன் தாத்பர்யம் இவ்வாறு:- புண்யதீர்த்தங்கள் பிராம்மணனின் வலது காதில் வசிக்கின்றன.

प्रभासादीनि तीर्थानि गङ्गाद्याः सरितः तथा।
आदित्या वसवो रुद्राः वायुरग्निश्च धर्मराट्।
विप्रस्य दक्षिणे कर्णे निवसन्ति हि देवताः ॥

கங்கை முதலான புண்ய தீர்த்தங்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், வாயு, அக்னி இவர்கள் பிராம்மணனுடைய வலது காதில் வசிக்கின்றனர்.

## ஹரி - குரு - வந்தனம்

பல் துலக்கிய பிறகு துளசீ வந்தனம் மிக அவசியம். அதற்கு நீர் ஊற்றி, மிருத்திகையை திலகம் இட்டுக்கொள்ள வேண்டும். பசுமாடு இருந்தால் அதற்கும் வந்தனம். பிறகு ஸ்வாமி பெட்டிக்கு அவசியம் நமஸ்காரம் செய்ய வேண்டும். அதேபோல, தாய் தந்தையர்களுக்கும், குருகளுக்கும் வந்தனம் செய்யவேண்டும். ஸ்தோத்ரம் சொல்லிக் கொண்டே மேற்கூறியவைகளைச் செய்யலாம். பிறகு ஸ்னானம்.

## ஸ்நானம்

புண்ய தீர்த்தங்களுக்குப் போகும்போது, கையில் தாமிரச் சொம்பு, அங்கவஸ்திரம், கர-வஸ்திரம், சின்ன தேவர பெட்டி, துளசீமணிமாலை, ம்ருத்திகா, தர்பை இவற்றை எடுத்துச் செல்லவேண்டும். நீரை அணுகியதும், தீர்த்த-அபிமானி தேவதைகளை மனதில் நினைத்து வணங்கி, முதலில் நீரை தலையில் புரோக்ஷணம் செய்து கொண்டு பிறகுதான் நீரில் கால் வைக்கவேண்டும். மும்முறை முழுகவேண்டும். இது மலஸ்நானம் ஆகும். பிறகு ஜல-ஸ்நானம். அதற்கு, ஆசமனம், ஸங்கல்பம், தீர்த்தவந்த

னம் இவை பூர்வ அங்கங்கள். பிறகு ஸ்நானக் கிரமம் இவ்வாறு :—

**சுலோகம் 3,4 (ஸ்நானம்)**

३. उद्धृतेति मृदाऽऽलिप्य द्विषट्-अष्ट-षडक्षरै:।
त्रि:निमज्य - आप्य - सूक्तेन प्रोक्षयित्वा पुनस्तथा ॥ (३)

४. मृदालिप्य निमज्य-त्रि:, त्रि: जपेत् अघमर्षणम् ।

**3. உத்ரிதேதி ம்ருதாலிப்ய த்வி-ஷட், அஷ்ட்ட, ஷடக்ஷரை: |**
**த்ரி: நிமஜ்ய - ஆப்ய - ஸூக்தேன ப்ரோக்ஷயித்வா புனஸ்ததா ||**
**4. ம்ருதாலிப்ய நிமஜ்ய-த்ரி:, த்ரி:ஜபேத் அகமர்ஷணம்**

**உத்ரிதேதி ம்ருதாலிப்ய** = 'உத்ரிதாஸி வராஹேண' என்னும் மந்திரத்தினால் சுத்தமான ம்ருத்திகையை உடம்பில் தேய்த்து, **த்வி - ஷடஷ்ட்ட - ஷடக்ஷரை:**த்வி-ஷட்=2 x 6 =12 **அக்ஷரங்களைக் கொண்ட த்வாதச அக்ஷர மந்த்ர, (1)** 'அஷ்ட்ட' என்றால் எட்டு அக்ஷர - நாராயண மந்த்ர **(2)** 'ஷட்' என்றால் ஆறு அக்ஷரங்கள் கொண்ட விஷ்ணு ஷடக்ஷர மந்தரம் **(3) த்ரி: நிமஜ்ய**=மும்முறை மூழ்கி, **ஆப்ய ஸூக்தேன**-'ஆபோஹிஷ்டா' என்னும் மந்திரத்தினால், **புரோக்ஷயித்வா**=புரோக்ஷணம் செய்து கொண்டு, **புன:, ததா,**=மறுபடியும் அதே போல

ஸ்னானத்திற்குப் போகும்போது துளசிச் செடியின் அடியிலிருந்து அல்லது சுத்தமான இடத்திலிருந்து எடுத்து வந்த மிருத்திகையை இருபாகம் செய்து, ஒரு பாகத்தை நாராயண அஷ்டாட்டாக்ஷர மந்திரத்தினால் புரோக்ஷித்து,

---

*(1)* ''ஓம் நமோ பகவதே வாஸுதேவாய'' *(2)* 'ஓம் நமோ நாராயணாய'' *(3)* ஓம் விஷ்ணவே நம:''

காயத்ரீ மந்த்ரத்தினால் அபிமந்த்ரித்து, உடம்பில் தேய்த்துக் கொள்ளவும். அப்போது 'உத்ரிதாஸி வராஹேண' என்னும் மந்த்ரம் உச்சரித்துக்கொண்டு வராஹரூபி பரமாத்மனை தியானிக்கவும். ஹிரண்யாக்ஷன் நீரில் மூழ்கடித்த பூமியை வெளியே தூக்கி வந்து ஸ்தாபனம் செய்தவர் ஸ்ரீ வராஹப் பெருமான். மண் என்றால் அவரது நினைவு வரவேண்டும். இதனால் உள்ளம் தூய்மை அடைகிறது. சுத்தமான மண் உடம்பைத் தூயப்படுத்துகிறது.

''உத்ருதாஸி வராஹேண'' என்பது ஒரு சின்ன வேத-ரிக். அதை உச்சரித்துக்கொண்டு மண் எடுக்கவேண்டும். அது தெரியாவிட்டால், வராஹரூபி பரமாத்மாவை மனதில் நினைத்து மண் எடுத்து, தேய்த்துக் கொள்ளவேண்டும்.

நீரில், அந்த ஊர் தீர்த்த-அபிமானி தேவதையின் தேஜோ-மய மூர்த்திகளை தியானித்து, அங்கு, திரவ-ரூபி ஸ்ரீ பிராண தேவரையும், அவருக்குள் பிரகாசிக்கும் திரவ ரூபி ஸ்ரீ நாராயணனையும் தியானித்து, நீரில் ஒரு வட்டமான ரேகையை எழுதி, மத்தியில் ஓம்காரம், நான்கு பாகங்களில் நான்கு ஓம்காரம் (மோதிர விரலினால்) எழுதி, 'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' என்று ஒரு முழுக்கு. 'ஓம் நமோ நாராயுணாய' என்று இரண்டாவது, 'ஓம் விஷ்ணவே நம:' என்று மூன்று முழுக்குகள். (சுலோகம் - 3)

## சுலோகம் - 4 (ஸ்நானம்)

**ம்ருதாலிப்ய, த்ரி:நிமஜ்ய**=உடம்பில் மிருத்திகையைத் தேய்த்து மும்முறை மூழ்கி, **அகமர்ஷணம் த்ரி:ஜபேத்** = மும்முறை 'அகமர்ஷண' மந்த்ரம் ஜபிக்கவேண்டும்.

முதலில் ஆசமனம், பிறகு, 'ஆபோஹிஷ்ட்டா'' என்னும் மந்த்ரத்தினால் புரோக்ஷணம் செய்து கொள்க. மிருத்திகையின் மற்றொரு பாதி கையிலிருப்பதை, கோபீசந்தனம் போல உபயோகித்து நாமம் இட்டுக்கொண்டு, மறுமுறை

உடம்பில் தேய்த்து மும்முறை மூழ்கவும். பிறகு 'அகமர்ஷண' ஸூக்தத்தை ஜபிக்கவும்.

## மலஸ்நானம், ஜலஸ்நானம்

நதியில் இறங்கியதும் முதலில் செய்தது (1)'மல-ஸ்னானம்'. ஸங்கல்பம் செய்துகொண்டு நியமத்துடன் செய்தது (2) **'ஜலஸ்நானம்'. இவைகளைத் தவிர,** (3) மந்த்ர ஸ்நான, (4) த்யான ஸ்நான, (5) வாருண ஸ்நான என்று ஸ்நானம் ஐந்து விதம்:-

मन्त्र स्नानं, मलस्नानं, ध्यान-स्नानं च वारुणम् ।
पञ्चमं च जल-स्नानं इति पञ्चविधं स्मृतम् ॥

## மந்த்ர ஸ்நானம்

மந்த்ர - ஸ்நானம் என்றால் முதலில் ஈரத்துணியினால் உடம்பைத் தேய்த்துக் கொள்ளுதல். முந்திய வஸ்த்ரத்தைக் களைந்து, மடிவேஷ்டி, பட்டு அல்லது வேறு மடி வஸ்த்ரம் தரித்தல். பிறகு பாத்திரத்திலோ அல்லது இடது கையிலோ நீர் வைத்துக்கொண்டு, காயத்ரீ மந்த்ரம் அல்லது 'ஓம் நமோ நாராயணாய'' என்னும் மூல மந்த்ரத்தினால் மூன்று முறை அபிமந்த்ரித்து, தர்பை அல்லது துளசீ தளத்தினால் உடம்பில் புரோக்ஷணம் செய்துகொள்ளுதல். பூமி, ஆகாசம், நமது தலை இவற்றிற்கு மும்மூன்று தடவை புரோக்ஷணம். ''ஆபோஹிஷ்டா'' என்னும் மார்ஜன மந்த்ரத்தை உச்சரித்து, புரோக்ஷணம். **இது மந்த்ர-ஸ்நானம்.** பிறகு ஆசமனம் செய்து, ஸந்த்யா வந்தனம் முதலான கர்மாக்களைத் தொடங்கலாம்.

## த்யான - ஸ்நானம்

ஸர்வ லக்ஷணங்களோடு கூடிய ஸ்வாமி இஷ்ட்ட தேவதையை தியானித்தல். இந்த பகவானின் பாதத்திலி

ருந்து கங்கைநதி ஓடிவருவதை தியானிக்கவும். இந்தப் புண்யநதி, நமது தலை, மற்றும் உடல்முழுதும் விழுவதாக சிந்திக்கவும். தலை உச்சியில் இருக்கும் பிரம்ம-ரந்தரம் என்னும் துவாரத்திலிருந்து கங்காநதி நமது சரீரத்தின் உள்ளே பிரவேசிப்பதாகத் தியானிக்கவும். பிறகு ஆசமனம். இப்படி தியானத்தில் நிலைத்து நின்று உள் உணர்ச்சியை அனுபவிப்பதே த்யான ஸ்நானம். இதன்பிறகு ஆசமனம், ஸந்த்யாவந்தனம் முதலிய கர்மாக்களைத் தொடங்கலாம்.

நதி, குளம் இவற்றில் ஸ்நானம் செய்ய சக்தியற்றவர்கள் வீட்டிலேயே வெந்நீர் ஸ்நானம் செய்ய வேண்டும். அதில் மிருத்திகையைப் போட்டு, காயத்ரீயினால் அபிமந்த்ரித்து ஸ்நானம் செய்ய வேண்டும். இதுவும் செய்ய முடியாதவர் கள், மேற்கூறிய தியான-ஸ்நானம் செய்து நித்ய கர்மாக்கள் தொடங்கலாம்.

ஜல-ஸ்நானம் செய்தவர்கள் கூட, அதோடு தியான-ஸ்நானம் செய்வது உத்தமம். ஆபத்காலத்தில் இன்னும் சில ஸ்நானங்களுக்கும் உண்டு. துளசிச் செடியின் அடியில் எடுத்த மிருத்திகை அல்லது கோபீசந்தனம் மட்டும் உடம் பில் நாமம் போட்டுக் கொள்வது 'பார்த்திவ - ஸ்நானம்.' ஹோமத்திற்குப் பிறகு எடுத்த பஸ்ம அல்லது சாம்பலை பூசிக் கொள்வது 'பஸ்ம-ஸ்நானம்'. பசுமாட்டின் பாத-தூளியைப் பூசிக்கொண்டு அதன்வாலினால் உடம்பைத் தேய்த்துக் கொள்வது 'வாயவ்ய - ஸ்நான'. இவற்றைத் தவிர 'பஞ்ச-கவ்ய-ஸ்நான', 'ஆமலக (நெல்லிக்காய்) ஸ்நா ன' முதலியவைகளும் உண்டு.

நதியில் அல்லது ஸமுத்ரத்தில் ஸ்நானம் செய்யும் போது, நீர்வரும் திசையை நோக்கியே நின்று கொண்டு ஸ்நானம் செய்யவேண்டும். குளத்தில், கிழக்கு அல்லது வடக்குநோக்கி நின்று ஸ்நானம் செய்க.

## சுலோகம் 4, 5 (ஸ்நானம்)

४. स्रष्टारं सर्वलोकानां स्मृत्वा नारायणं परम् ॥ (४)

५. यत श्वासो निमज्याऽप्सु प्रणवेन उत्थितस्ततः ।
सिञ्चेत् पुरुषसूक्तेन स्वदेहस्थं हरिं स्मरन् ॥ (५)

**4. ஸ்ரஷ்ட்டாரம் ஸர்வ - லோகானாம் ஸ்ம்ருத்வா நாராயணம் பரம் ||**

**5. யத ஸ்வாஸோ நிமஜ்யாப்ஸு ப்ரணவேன உத்திதஸ் தத: |**
**ஸிஞ்சேத் புருஷஸூக்தேன ஸ்வ-தேஹஸ்த்தம் ஹரிம் ஸ்மரன் ||**

**ஸ்ரஷ்ட்டாரம் ஸர்வ-லோகானாம்** = அனைத்து உலகங்களுக்கும் ஸிருஷ்டி கர்த்தாவான, பிரளய-நீரில் வடபத்ர-ஸாயியான நாராயணனை தியானம் செய்தவாறு ஸ்நானம் செய்க.

பித்ருக்களை தியானித்து அவர்களுக்காக ஸநானம் செய்க. அதேபோல குருமார்களுக்கும் ஸ்நானம். பிறகு அகமர்ஷண ஸூக்தத்தை மனதில் சொல்லியவாறு மூச்சு அடக்கிக் கொண்டு ஸ்னானம் செய்தல்.

## அகமர்ஷண - ஸ்நானம்

**யதஸ் ச்வாஸ:** = மூச்சு அடக்கி **நிமஜ்ய அப்ஸு**= நீரில் மூழ்கி, **ப்ரணவேன உத்தித:**='ஓம்' என உச்சரித்து, மேலே எழுந்து, **புருஷஸூக்தேன**=புருஷ ஸூக்தத்தினால், புரோக்ஷணை செய்து கொள்ளவும். **ஸ்வ - தேஹஸ்தம்** = தனது தேஹத்திலிருக்கும். **ஹரிம் ஸ்மரன்** = ஸ்ரீஹரியை தியானித்து. **ஸிஞ்சேத்**=ஸ்நானம் செய்க.

## ஜல - தர்ப்பணம்

நீரில் இருந்தபடியே மும்மூன்று முறை தர்ப்பணம். **'ப்ரம்மாதயோ யே தேவா: தான் தேவான் தர்ப்பயாமி'** பூர் (Bhoor) **தேவான் தர்ப்பயாமி,** 'புவர் (Bhuvar) **தேவான் தர்ப்பயாமி', 'ஸுவர் தேவான் தர்ப்பயாமி', பூர்-புவஸ்-ஸுவர் தேவான் தர்ப்பயாமி'** என்று ஸவ்யத்துடன் தேவர்களுக்கு தர்ப்பணம். அதாவது இரு கைகளாலும் அர்க்யம் கொடுத்தல்.

பிறகு ரிஷி தர்ப்பணம். பூணூல் வனமாலா. மந்த்ரம்:- **'க்ருஷ்ண த்வை-பாய-நாதய:, யே ரிஷய:, தான் ரிஷீன் தர்ப்பயாமி. பூர்ரிஷீன் தர்ப்பயாமி, புவர்ரிஷீன் தர்ப்பயாமி, ஸுவர் ரிஷீன் தர்ப்பயாமி, பூர்-புவஸ்-ஸுவர் ரிஷீன் தர்ப்பயாமி.**

பிறகு பித்ரு தர்ப்பணம். அப ஸவ்யம். **'ஸோமப் பித்ருமான் யமோ (அ)ங்கிரஸ:, அக்னிஷ்வாத்தா: கவ்ய - வாஹ - னாதய:, யே-பிதர: தான் பித்ரூன் தர்ப்பயாமி, பூ:பித்ரூன் தர்ப்பயாமி, புவப் பித்ரூன் தர்ப்பயாமி, ஸ்வப் பித்ரூன் தர்ப்பயாமி, பூர்-புவஸ்-ஸ்வப்-பித்ரூன் தர்ப்பயாமி'** என்று ஜலதர்பணம்.

அதன் பிறகு, 'யே கே ச அஸ்மத் | குலே ஜாதா:, அபுத்ரா: கோத்ரிணோ ம்ருதா: | தே க்ருண்ணந்து மயா தத்தம் வஸ்த்ர நிஷ்பீட -னோதகம்'' என்று மேல் வேஷ்டி யைப் பிழியவும். நம் குலத்தில், மற்றும் கோத்ரத்தில் ஸந்ததி இல்லாமல், இறந்தவர்களுக்கு நற்கதி கிடைப்பதற் காக இதைக் கொடுக்க வேண்டும். உடுத்த வஸ்த்ரத்தினால் இதைக் கொடுக்கலாகாது. மேல் வஸ்திரத்தினால் கொடுப் பது.

கரைக்கு வந்து யக்ஷ தர்பணம் கொடுத்தல். நீரை நாம் அசுத்தம் செய்தமைக்காக இந்த தர்ப்பணம். பிறகு அந்தந்த தீர்த்த மஹிமை சுலோகங்களைச் சொல்லவேண்டும். (Slo-5)

६. वसित्वा-वास-आचम्य प्रोक्ष्य-आचम्य च मन्त्रत:।
गायत्र्या च अञ्जलिं दत्वा ध्यात्वा सूर्यगतं हरिम्॥ (६)

***6. வஸித்வா - வாஸ - ஆசம்ய ப்ரோக்ஷ்ய-ஆசம்ய ச மந்த்ரத:|***
***காயத்ர்யா ச அஞ்ஜலிம் தத்வா த்யாத்வா ஸூர்ய கதம் ஹரிம்||***

**வாஸ-வஸித்வா**=வஸ்த்ரம் உடுத்து, **ஆசம்ய** = ஆசமனம் செய்து. **புரோக்ஷ்ய**='சுசி-ஹவ்யா' என்னும் மந்த்ரத்தினால், களைந்த வஸ்த்ரத்தைப் புரோக்ஷித்து, **ஆசம்ய**= ஆசமனம் செய்து. **காயத்ரியா**=காயத்ரீ மந்த்ரத்தினால். **அஞ்ஜலிம் தத்வா**= அர்க்யம் கொடுத்து. **ஸூர்ய-கதம்-ஹரிம் த்யாத்வா** = ஸூர்ய மண்டலத்திலிருக்கும் நாராயணனை தியானம் செய்ய வேண்டும். ஸந்த்யாவனம், தியானம், ஜபம் முதலியன குறிப்பிடப்படுகிறது.

பஞ்ச கச்சம் உடுக்கவேண்டும். கோபீசந்தனநாமம், முத்ரை இவற்றை தரித்தல் இவை இங்கு உள் அடங்கியவை ஆகும். நாமம் தரித்துக் கொள்ளும்போது பகவானின் பன்னிரண்டு நாமங்களை உச்சரிக்கவேண்டும்.

## ஸ்த்ரீகள் குங்கும தாரணக்-கிரமம்

ஸ்த்ரீகள் கழுத்துவரை ஸ்நானம் செய்யவேண்டும். உலர்ந்த வஸ்த்ரம் உடுத்து, ஆசமனம் செய்து, குங்குமம் இட்டுக்கொள்ளவேண்டும்.

## ஸந்த்யா வந்தனக் கிரமம்

ஸந்த்யா வந்தனத்தில் இரண்டு பிரதான அம்சங்களான அர்க்யப் பிரதானம், ஸூர்ய மண்டலத்தில் உள் இருக்கும் நாராயணனின் தியானம் இவை இரண்டை மட்டும் இந்த சுலோகம் குறிப்பிடுகிறது. அடுத்து வரும் சுலோகங்களில்

திக் தேவதா நமஸ்காரம், ஜப எண்ணிக்கை, ஸந்த்யா வந்தனத்தின் காலம், தியான சுலோகங்கள் முதலியன சூசனை செய்யப்பட்டுள்ளன.

ஸந்த்யாவந்தன விவரம் இவ்வாறு:-ஆசமனம், பிராண யாமம். தேச-காலம்-சொல்லி ஸங்கல்பம். 'ஓம் ஆபோ ஹிஷ்ட்டா' என்று மார்ஜனம். 'ஓம் ஸூர்யஸ்ச' என்று ஜலாபி-மந்த்ரணம், அர்க்யப்ரதான, ஆஸன சுத்தி, ப்ராணா யாம, அங்கன்யாஸ, த்யான, காயத்ரீ மந்த்ர ஜப, திக் - உபஸ்தான, திக் நமஸ்கார, 'யஸ்ய — ஸ்ம்ருத்யா' என்று ஸந்த்யாவை பூர்த்தி செய்தல், இவை யாவும் 6 முதல் 10 வரையிலுள்ள சுலோகங்கள் சூசனை செய்கின்றன.

### சுலோகம் - 7 (காயத்ரீ)

७. मन्त्रत: परिवृत्याथ समाचम्य सुरादिकान्।
तर्पयित्वा निपीड्याथ वासो विस्तृत्य च अञ्जसा॥ (७)

***7. மந்த்ரத: பரிவ்ருத்யாத ஸமாசம்ய ஸுராதிகான் |***
***தர்ப்பயித்வா நிபீட்யாத வாஸோ விஸ்த்ருத்ய ச அஞ்ஜஸா||***

**மந்த்ரத:**='அஸௌ, ஆதித்யோ ப்ரஹ்ம' போன்ற மந்தரங்க ளினால் **பரி-வ்ருத்ய**=பிரதக்ஷிணை செய்து, திக்தேவதைக ளுக்கும் நமஸ்காரம் செய்து ஸந்த்யாவந்தனத்தை முடிக்க வேண்டும். **அத**=பிறகு **ஸுராதிகான் தர்ப்பயித்வா** = தேவதர்ப்பண, ரிஷி, பித்ரு தப்பணங்களைக் கொடுத்து. **நிபீட்ய-அத-வாஸோ விஸ்த்ரித்ய ச அஞ்ஜஸா** = பக்கத்தில் வைத்துக் கொண்டு அங்கவஸ்த்ரத்தை விரித்து, நீரில் தோய்த்து, உலர்த்தல் வேண்டும்.

அர்க்ய ப்ரதானம், ஸூர்ய உபஸ்தானம் முதலிய எல்லா ஸந்த்யா கர்மாக்களை முடித்து, பிறகு தேவ-ரிஷி-பித்ரு தர்ப்பணங்களைக் கொடுக்கவேண்டும்.

## காயத்ரீ

ப்ராதஸ் (காலை) ஸந்த்யாவந்தனத்தில் **'காயத்ரீ' என்றும், மாத்யான்ஹிகத்தில் 'ஸாவித்ரீ'** என்றும் ஸாயம் ஸந்த்யாவில் 'ஸரஸ்வதீ' என்றும் உபாஸனை செய்க.

गायत्री नाम पूर्वी स्यात् सावित्री मध्यमे दिने।
सरस्वती च सायाह्ने सैव संध्या त्रिषु स्मृता॥

***காய்த்ரீ நாம பூர்வீ ஸ்யாத் ஸாவித்ரீ மத்யமே தினே|***
***ஸரஸ்வதீ ச ஸாயான்னே ஸைவ ஸந்த்யா த்ரிஷு ஸ்ம்ருதா||***

ஸ்தோத்ரம் செய்பவனைக் காப்பாற்றுகிறான் என்பது 'காயத்ரீ' சொல்லுக்குப் பொருள். ***'காயந்தம் த்ராயதே இதி காயத்ரீ'*** என்பது ஸம்ஸ்கிருத வாக்கு.

'ஸாவித்ரி' = ஸவித்ரு த்யோதனாத் = ஸாவித்ரீ. ஸூர்ய மண்டலத்தில் பிரகாசிப்பவன் ஆகையால் பகவானுக்கு ஸாவித்ரீ எனப் பெயர். ஸவிதா என்றால் ஸூரியன்.

'ஸரஸ்வதீ' = வாக் ரூபத்வாத் = ஸரஸ்வதீ. அவன் வாக்-ரூபி ஆனதால் பகவானுக்கு 'ஸரஸ்வதீ' என்றும் பெயர்.

१. गायत्री स उच्यते यस्मात् गायन्तं त्रायते ततः।
२. सवितृ द्योतनाच्चैव सावित्री परिकीर्तिता।
३. जगतः प्रसवित्री वा वाग्रूपत्वात् सरस्वती॥

### ச்லோகம் - 8 (காயத்ரீ ஜபமுறை)

८. अर्कमण्डलगं विष्णुं ध्यात्वैव त्रिपदीं जपेत्।
सहस्र-परमां देवीं शतमध्यां दशावराम्॥ (८)

**8. அர்க்க மண்டலகம் விஷ்ணும் த்யாத்வைவ த்ரி-
பதீம் ஜபேத்|
ஸஹஸ்ர பரமாம் தேவீம் சதமத்யாம் தசா-வராம்||**

**அர்க்க மண்டலகம் விஷ்ணும்**=ஸூர்ய-மண்டலத்திலிருக்கும் நாராயணனை **த்யாத்வா** ஏவ='த்யேயஸ் ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தீ' போன்ற மந்த்ரங்களினால் தியானித்து **த்ரிபதீம்** = மூன்று பாதங்கள் கொண்ட காயத்ரீ மந்த்ரத்தை அல்லது காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்வதீ என்று மூன்று பெயருள்ள காய்த்ரீ-தேவதா மந்த்ரத்தை, **ஸஹஸ்ர பரமாம் தேவீம் சத மத்யாம் தசா - வராம்** = காயத்ரீ தேவதா மந்த்ரத்தை பத்து, நூறு அல்லது ஆயிரம் தடவை ஜபிக்க வேண்டும். இந்த ஜப எண்ணிக்கை, மிகக் குறைந்த பக்ஷம் 10, மத்யம பக்ஷம் 100, உத்தம பக்ஷம் 1000 என்று குறிக்கின்றது.

## ஜபம் செய்யும் முறை

ஜபத்தை மனதிலேயே செய்வது உத்தமம். சற்று உதட்டை அசைத்தவண்ணம் ஜபிப்பது மத்யமம். வாய் விட்டு உச்சரித்து ஜபிப்பது கடைசீ பக்ஷம். உதட்டை அசைத்து ஜபித்தலுக்கு 'உபாம்சு' என்று பெயர்.

उत्तमं मानसं जाप्यं उपांशु:मध्यमं स्मृतम्।
अधमं वाचिकं प्राहु: सर्व मन्त्रेषु वै द्विजा:।

வலது கையினால் ஜப எண்ணிக்கையை எண்ணவேண்டும். அப்போது வஸ்த்ரத்தினால் கையை மூடிக் கொள்ள வேண்டும்.

वसत्रेणा च्छाद्य तु करं दक्षिणं य: सदा जपेत्।
तस्य तत् सफलं जप्यं तद्-हीनं अफलं स्मृतम्॥

ஜபத்தை எண்ணுவதற்கு துளசி மணியை உபயோகிக்க வேண்டும். காயத்ரீ மந்த்ரம் ரிக்வேத ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மந்த்ரத்தை உச்சரிக்கும் போது, முதலில் ப்ரணவ அல்லது 'ஓம்', மற்றும் வியாஹ்ரு திகள் (அதாவது பூ:, புவ:, ஸ்வ:) இவற்றை உச்சரித்து, பிறகு காயத்ரீ மந்த்ரத்தை ஜபிக்கவேண்டும். அது இவ்வாறு:-

ओं। भू र्भुवस् स्वः
तत् सवितुर् वरेण्यम्।
भर्गो देवस्य धीमहि।
धियो यो नः प्रचोदयात्।

ஓம் பூர் புவஸ் ஸ்வஹ|
தத் ஸவிதுர் வரேண்யம்|
பர்கோ தேவஸ்ய தீமஹி|
தியோ யோ நஹ ப்ரசோதயாத்||

இதை 10, 100 அல்லது 1000 தடவை ஜபிக்கவேண்டும்.

**சுலோகம் 9, 10 (ஸந்த்யாவந்தன காலம்)**

९. आ-सूर्य-दर्शनात् तिष्ठेत् ततस्तु उपविशेत वा।
पूर्वां सन्ध्यां सनक्षत्रां उत्तरां सदिवाकराम्॥ (९)

१०. उत्तरां उपविश्यैव वाग्यतः सर्वदा जपेत्।

*9. ஆ-ஸூர்ய-தர்சனாத் திஷ்டேத் ததஸ்து உபவி சேத வா|*
**பூர்வாம் ஸந்த்யாம் ஸ-நக்ஷத்ராம் உத்தராம் ஸ-திவாகராம்||**

**10. உத்தராம் உபவிச்யைவ வாக்யத: ஸர்வதா ஜபேத்|**

**ஆ-ஸூர்ய தர்சனாத்** = ஸூர்ய தரிசனம் ஆகும் வரை காயத்ரீ மந்த்ரத்தை ஜபித்து, **திஷ்ட்டேத்**=நிற்க வேண்டும். **தத:**=பிறகு **உபவிசேதவா** உட்கார்ந்து அல்லது நின்று ஜபிக்க வேண்டும். **பூர்வாம்** = காலை **ஸந்த்யாம்** = ஸந்த்யா காலத்தில் செய்யவேண்டிய காயத்ரீ ஜபத்தை **ஸ-நக்ஷத்ராம்** = இன்னும் ஆகாயத்தில் நக்ஷத்ரங்கள் இருக்கும் போதே செய்ய வேண்டும். **உத்தராம் ஸந்த்யாம்** = மாலை ஸந்த்யா வந்தனத்தை **ஸ-திவாகராம்** = இன்னும் ஸூர்யன் இருக்கும்போதே ஜபிக்கவேண்டும். (Slo.9)

**உத்தராம்** = ஸாயம் ஸந்த்யாவந்தனம். **உபவிச்யைவ** = ஸூர்யனை நோக்கி உட்கார்ந்துகொண்டேதான். செய்ய வேண்டும். ஜபிக்கும் போது **ஸர்வதா வாக்யத:ஜபேத்** =வேறு பேச்சுக்கள் பேசாமல் மௌனமாக ஜபிக்கவேண்டும். மத்யான ஸந்த்யாவும் உட்கார்ந்திருந்தே செய்யவேண்டும்.

நக்ஷத்ரங்கள் மறையும்முன்பே காலை ஸந்த்யா செய்வது உத்தம பக்ஷம். நக்ஷத்ரங்கள் மறைந்து, இன்னும் ஸூர்ய உதயம் ஆகாமலிருக்கும்போது செய்வது மத்யம பக்ஷம். சூரியனைக் கண்டபிறகு ஸந்த்யா வந்தனம் செய்வது கடைசீ பக்ஷம்.

அதே போல, ஸாயம் ஸந்த்யா, ஸூர்யன் இன்னும் காணும்போதே செய்வது உத்தமம். நக்ஷத்ரங்கள் இன்னும் வெளிச்சமாகக் காணாமல் இருக்கும்போது செய்வது மத்யமம். ராத்ரி ஆனபிறகு செய்வது கடைசீ பக்ஷம்.

### சுலோகம் 10 (காயத்ரீ தியான சுலோகம்)

१० ध्येयस्सदा सवितृ-मण्डल मध्यवर्ती
नारायण: सरसिजासन सन्निविष्ट:।
केयूरवान् मकर कुण्डलवान् किरीटी
हारी हिरण्मय-वपु:धृत-शङ्ख-चक्र:॥ (१०)

**10. த்யேயஸ் ஸதா ஸவித்ரு-மண்டல மத்யவர்த்தி
நாராயண: ஸரஸி-ஜாஸன ஸன்னி-விஷ்ட்ட: |
கேயூரவான் மகர குண்டலவான் கிரீடீ
ஹாரீ ஹிரண்மய-வபு: த்ருத சங்க சக்ர: ||**

**ஸவித்ரு - மண்டல:** - ஸூர்ய மண்டலத்திலிருக்கும் **ஸரிஜ - ஆஸன - ஸன்னிவிஷ்ட்ட:** = தாமரை ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கும் **கேயூரவான்** = தோள் - ஆபரணங்களை தரித்துக் கொண்டிருக்கும் **மகர குண்டலவான்** = முதலை வடிவத்திலுள்ள கர்ணபூஷண அல்லது காது ஆபரணங்களை தரித்தவனாக **கிரீடி, ஹாரீ** = கிரீடம், மற்றும் ஹாரங்களை தரித்த **த்ருத சங்க சக்ர:** - சங்க, சக்ரங்களை ஏந்தியிருக்கும், **ஹிரண்மய வபு:** தங்கமயமான தேஹத்தை உடைய **நாராயண:** = நாராயணனை **த்யேய: ஸதா** = எப்போதும் தியானிப்பேன்.

''தந்த்ர ஸாரம்'' என்னும் நூலில் ஆசார்ய ஸ்ரீ மத்வர் இவ்வாறு நாராயணனை வர்ணித்திருக்கிறார்:-

प्रोद्यदादित्य वर्णाभ: सूर्यमण्डल मध्यग:।
शङ्ख चक्र दरोङ्कस्थ दो-र्द्वयो: ध्येय एव च॥

**ப்ரோத்ய-தாதித்ய வர்ணாப: ஸூர்யமண்டல மத்யக:
சங்க-சக்ர தரோங்கஸ்த்த தோர்-த்வயோ: த்யேய-ஏவ ச ||**

ஸந்த்யாவந்தனத்தில் 'த்யே-யஸ்-ஸதா, ஸவித்ரு-மண்டல' என்னும் தியான சுலோகத்தோடு, மேற்குறித்த சுலோகத்தை யும் சேர்த்துச் சொல்லவேண்டும்.

### சுலோகம் 11, 12 (உபாஸனை, தியானம்)

११. गायत्र्या: त्रिगुणं विष्णुं ध्यायन् अष्टाक्षरीं जपेत्।
प्रणम्य देवान् विप्रान्श्च गुरून् श्च हरिपार्षदान्॥ (११)

१२. एवं सर्वोत्तमं विष्णुं ध्यायन्नेव अर्चयेत् हरिम् ।

*11. காயத்ர்யா:த்ரி-குணம் விஷ்ணும் த்யாயன் அஷ்டாக்ஷரீம் ஜபேத்।*
*ப்ரணம்ய தேவான் விப்ரான்ஸ்ச, குரூன்ஸ்ச । ஹரி-பார்ஷதான் ||*
*12. ஏவம் ஸர்வோத்தமம் விஷ்ணும் த்யாயன்னேவ அர்ச்சயேத் ஹரிம் ।*

**காயத்ரயா** = ஸந்த்யா வந்தனம் செய்யும் போது எவ்வளவு காயத்ரீ ஜபம் செய்கிறோமோ அதைப் போல **த்ரி-குணம்**=மூன்று மடங்கு. **விஷ்ணும் அஷ்டாக்ஷரீம் ஜபேத்** = 'ஓம் நமோ நாராயணாய' என்னும் அஷ்ட்டாக்ஷர மந்தரத்தை ஜபிக்கவேண்டும். **தேவான்** = பிரம்மா முத லான தேவர்களையும், **விப்ரான்** = பிராம்மணர்களையும், **குரூன்** = குருகளையும், **ஹரி-பார்ஷதான்** = பரமாத்மா வின் பக்தர்களையும், **ப்ரணம்ய** = வணங்கி,, **ஸர்வோத்த மம்** = எக்காலத்திலும், எத்தேசத்திலும் எவரைக்காட்டிலும் உத்தமனான **ஹரிம்** = ஹரியை **த்யாயன்-ஏவ** = தியானித் துக் கொண்டே **அர்ச்சயேத்** = அர்ச்சனை முதலிய கார்யங்களைத் தொடங்கவேண்டும்.

ஸதாசார ஸ்ம்ருதியில் 6 முதல் 11-வது சுலோகம் வரை கூறப்பட்ட விஷயங்கள் இவை: ஸந்த்யா வந்தனத்தில் முக்ய அம்சங்களான அர்க்யம் கொடுத்தல், தியானம், ஜபம், திக்-தேவதைகளுக்கு நமஸ்காரம், ஸந்த்யாவந்தனத்திற்கு உரிய காலம், த்யான-சுலோகம் முதலியன கூறப்பட்டன. இவற்றை மனதில் கொண்டு, ஆன்ஹிக-பத்ததியில் விளக்கம் கொடுத்தபடி ஸந்த்யா வந்தனம் செய்யவேண்டும்.

## குரு, மற்றும் தந்தை

வித்யா-தானம் செய்தவர் குரு. முழுமையாக வித்யா-தானம் செய்தவரைத் தவிர சிறிதேனும் வித்யா தானம் செய்தவரும் குருவே ஆவார்.

अलपं वा बहू वा यस्य श्रुतस्योपकरोति यः।
तमपि इह गुरुं विद्यात् श्रुतोपकृति हेतुतः॥

*அல்பம் வா பஹூவா யஸ்ய ச்ருதஸ்ய உபகரோதி ய:|*
*தமபி இஹ குரும் வித்யாத் ச்ருத-உபக்ருதி ஹேதுத:||*

என்பது பிரமாண வாக்யம். ஆசார்யரும், தந்தையும் ஒரே இடத்தில் இருந்தால், ஆசார்யரை முதலில் வணங்கி, பிறகு தந்தையை வணங்கவேண்டும்.

## சுலோகம்-12 (உபாஸனை, தியானம்)

१२. ध्यान-प्रवचनाभ्यां च यथा-योग्यं उपासनम्॥ (१२)

***12. த்யான-ப்ரவசனாப்யாம் ச யதா யோக்யம் உபாஸனம் ||***

**த்யான - ப்ரவசனாப்யாம்** = தியானம் மற்றும் சொற்பொழிவுகளினால் **யதா யோக்யம்** = அவரவர் தகுதிக்கு ஏற்றவாறு பகவானின் **உபாஸனம்** = உபாஸனை செய்ய வேண்டும்.

தியானம் என்றால், எல்லா இடங்களிலும் விஷ்ணு இருப்பதாக தியானம். அகில அண்டத்தில் எங்கும் பரவி நிற்கும் மூர்த்தியே விராடரூபம். இந்த ரூபத்தின் தியானம். தனது ஹிருதயத்தில் நிற்கும் இஷ்ட்ட தேவதா தியானம் போன்ற பலவித தியானங்கள் உண்டு. இவற்றில் எவற்றிற்கு நாம் தகுதியோ அத்தியானத்தை தினமும் தவறாமல் செய்தே தீரவேண்டும். அதேபோல, வேத விஷயங்கள், பாரதக் கதைகளில் காணும் நீதிகள் போன்ற ஈச்வர மஹிமைகளை தனக்குத் தெரிந்ததை அவசியம் மற்றவர்களுக்கு சொல்லிக் கொடுப்பதோ, எடுத்துரைப்பதோ தவறாமல் செய்ய வேண்டும்.

## உபாஸனம் - இரு வகை

உபாஸனம் இரண்டு விதம் என்று ஸ்ரீ மத்வர் அருளியிருக்கிறார். (1) சாஸ்த்ர அப்யாஸம், (2) தியானம் என்று இருவகை.

सा उपासना च द्वि-विधा, शास्त्राभ्यास स्वरूपिणी।
ध्यान रूपा अपरा चैव तदङ्गं धारणादिकम्॥

**ஸா உபாஸனா ச த்வி-விதா, சாஸ்த்ராப்யாஸ ஸ்வரூபிணீ |**
**த்யான-ரூபா அபரா சைவ** (Chaiva) **ததங்கம் தாரணாதிகம்|**

தியானமும், சொற்பொழிவும், நிதித்யாஸனத்தின் இரு முறைகள். கேட்பது, மற்றும் மனதில் திருப்பித் திருப்பி நினைவூட்டிக் கொள்ளுதல் (சிரவண, மனன) கூட இதில் உள் அடங்கியது. இவை முக்திக்கு வழிவகுப்பவை ஆகும். சாஸ்த்ர-அறிவு ஏதுமில்லாதவர்களுக்கு ஏற்றது சிரவணம். சாஸ்த்ர அறிவில் இன்னும் திடமான உறுதி ஆகாதவர்களுக்கு ஏற்றது மனனம். தத்துவ அறிவில் உறுதி பெற்றவர்களுக்கு தியானம் உயர்ந்த பலன் அளிக்கிறது. ஆகவே, சாமான்ய நிலையில் உள்ளவர்களுக்கு சிரவணம், மற்றும் மனனம் மிக அத்யாவச்யமாகும்.

வெறும் தியானம் மட்டும் செய்பவர்களை விட சாஸ்த்ர-விமரிசனம் செய்பவர்கள் உயர்ந்தோர். இவர்களை விட உயர்ந்தோர் சாஸ்த்ரத்திற்கு உரை எழுதும் வல்லமை படைத்த ஆன்றோர்கள். அவர்களையும் விட உயர்ந்த அபரோக்ஷ-க்ஞானிகள் சாஸ்திர அறிவில் மிகச் சிறந்தவர்கள்.

## தாரணா, த்யான, ஸமாதி, தர்சன

பகவத்-நினைவு, தொடர்ந்து செய்யும்போது அவ்வப் போது விட்டு-விட்டு நினைவுபடுத்திக் கொள்வது **தாரண** எனப்படுவது. அகண்ட-ஸ்ம்ருதி அல்லது தொடர்ந்து (ஸ்ம ரணை)பகவன்-மூர்த்தியை மனக்கண்ணில் பார்த்துக் கொண் டிருப்பது **தியானம்.** பிரயத்தனம் அல்லது முயற்சியின்றி, நினைத்த மாத்திரத்தில் ஹ்ருதயத்தில் தெய்வ உருவத்தை நிலை நிறுத்திக் கொண்டு ஆனந்தத்தை அனுபவிப்பது **ஸமாதி** ஆகும். வெகுகாலம் தொடர்ந்து நிலைத்து நிற்கும் தெய்வ-நினைவு **தரிசனம்** எனப்படுவது.

खण्ड-स्मृति धारणा स्यात् अखण्डा ध्यानं उच्यते।
अप्रयत्नतात् समाधिश्च दर्शनं चिरयाऽनया॥

பரமாத்மனை நன்றாக அறிந்து, சொற்பொழிவு செய்ப வர்களுக்கு அனைத்துச் செயல்களின் பலன்களும் கிட்டும். தனக்குள், தானே தியானம் செய்வது, மற்றவர்களுக்கு அறிவூட்டுவது. இவ்வாறு உபாஸனை செய்வதினால், அபரோக்ஷக்ஞானம் உண்டாகிறது. அதாவது பரமாத்மனைக் காணும் பாக்கியம் கிடைக்கிறது.

## தியானத்தின் அங்கங்கள்

யம, நியம, ஆஸன, ப்ராணாயாம இவை நான்கும், தியானத்தின் அங்கங்கள். **யம** = அஹிம்ஸா, ஸத்யம், திருடும் எண்ணம் நீங்கிய நிலை, பிரம்மசர்ய விரதத்தில்

Yama, Niyama, Asana, Pranayama
4 7 3 3

நிலைத்திருப்பது, யாரிடமிருந்தும் எதையும் கேட்டு வாங்கிக் கொள்ளாமை. இவைகள் சேர்ந்து 'யம'. **நியம** = விஷ்ணுபூஜை, தியானம். உள்ளும், வெளியேயும் தூய்மையுடன் இருத்தல், தபஸ், ஸந்தோஷம், சாஸ்த்ரப் படிப்பு, தெய்வ பூஜை, இவை 'நியம' **ஆஸன** = வீராஸனத்திலும், பத்மாஸனத்திலும், ஸ்வஸ்திக போன்ற ஆஸனத்திலும் உட்கார்ந்து தெய்வ-த்யானம் செய்வது 'ஆஸனம்'.**பிராணாயாம** = ரேசக, பூரக, கும்பக என்னும் முறையில் மூச்சுப் பயிற்சி செய்வது 'ப்ராணா-யாமம்' ஆகும். இதனால் எளிதாக மனதைக் கட்டுப்படுத்தி, விரும்பிய தெய்வ உருவத்தை தியானத்தில் இருத்திக்கொள்ள முடிகிறது.

### ச்லோகம் - 13 (விஷ்ணு பூஜை)

१३. धर्मेण इज्या-साधनानि साधयित्वा विधानत: ।

स्नात्वा संपूजयेत् विष्णुं वेद-तन्त्रोक्त-मार्गत: ॥ (१३)

**13. தர்மேண இஜ்யா ஸாதநானி ஸாதயித்வா விதானத:।**

**ஸ்நாத்வா ஸம்பூஜயேத் விஷ்ணும் வேத தந்த்ரோக்த மார்கத:॥**

**தர்மேண** = தர்ம மார்கத்தில் **இஜ்யா ஸதநானி** = பூஜைக்குத் தேவையான பொருட்களை **ஸாதயித்வா** = தயாரித்துவைத்துக்கொண்டு, **விதானத:** = விதிமுறைப் படி **ஸ்நாத்வா** = ஸ்நானம் செய்து **வேத - தந்த்ர - உக்த மார்கத:** = வேத, மற்றும் பஞ்ச ராத்ர நூல்களில் கூறியபடி **விஷ்ணும்** = **பகவானை ஸம்பூஜயேத்** = பூஜிக்கவேண்டும்.

தர்மேண என்றால், பிரம்மசாரி, கிருஹஸ்தன், ஸன்யாஸி ஆச்ரமத்திலிருப்பவர்கள் அவர்-அவர் யோக்யதைக்கு

உகந்தவாறு என்று பொருள். யோக்யமானவர்கள், யோக்ய மான முறையில் ஸம்பாதித்து, அவர்கள் அளிக்கும் பொருள் களையும், தேவபூஜைக்குத் தேவையான, புஷ்பம், பழம் போன்ற பொருள்களை நல்ல முறையில் சம்பாதிப்பது இந்த ச்லோகத்தின் உட்கருத்து. சாலக்ராமத்தில் பகவான் தனக்குத் தானே நித்யமாக இருப்பதால் இவற்றிற்கு ஆவா ஹனம் தேவையில்லை. ஆனால் பிரதிமைகளில் தேவதா ஆவாஹனம் செய்து, பிறகு உபாஸனை (பூஜை) செய்ய வேண்டும்.

## பூஜையின் உட்கருத்து.

நாம் செய்யும் எல்லா காரியங்களையும், பகவானுக்கு அர்ப்பணம் செய்வது பூஜையின் உட்கருத்து. அர்ப்பண-புத்தியுடன் செய்த கர்மா (அல்லது காரியம்) நம்மை பாதிக்காது. 'யக்ஞ' என்றால் விஷ்ணு. இவனது 'பூஜை' என்னும் எச்சரிக்கை இல்லாமல் 'நான் செய்தேன்' என்னும் எண்ணத்துடன் செய்யும் காரியத்தின் விளைவு பந்தகம். அதாவது கட்டுக்கு உள்ளாக்குகிறது. விஷ்ணுப்ரீதிக்காகவே எந்த காரியத்தையும் செய்வேன், தானம் வாங்குவது, கொடுப்பது எதுவும் அவன் ப்ரீதிக்காகவே என்று எப்போ தும், ஜபித்து, தெய்வ பூஜா முதலான காரியங்களைத் தொடங்க வேண்டும்.

ஹோமத்திற்கு முன்னதாக ஸமஸ்காரம் செய்த நெய் மறுமுறை ஸம்ஸ்காரம் செய்யப்படுவதில்லை. அதுபோல ஒரு பிரதிமைக்கு அர்ப்பணம் செய்த நைவேத்யத்தை மற்றொரு பிரதிமைக்கு அர்ப்பணம் செய்யலாகாது.

நைவேத்தியத்திற்கு நெய் வைக்கும்போது கெட்டி நெய்தான் வைக்கவேண்டும். திரவமான நெய் கூடாது. அதேபோல, கெட்டி சந்தனம் தான் பகவானுக்கு ஸமர்ப் பிக்க வேண்டும். கரைத்த சந்தனம் கூடாது. சந்தனப் பொட்டு வைப்பது கூடாது.

द्रवीभूतं घृतं चैव द्रवीभूतं च चन्दनम् ॥

न अर्पयेत् मम तुष्ट्यर्थं घनीभूतं तदर्पयेत् ॥

அபராதங்களை மன்னிக்கும்படி பகவானை இவ்வாறு பிரார்த்தனை செய்யவேண்டும்.

मानसान् वाचिकान् दोषान् कायिकान् अपि सर्वदा ।

वैष्णव-द्वेष-हेतून् मे भस्मसात् कुरु माधव ॥

ஓ மாதவ, மனத்தினால் நான் செய்த தோஷங்கள், என் பேச்சு, செயல் இவற்றால் நான் புரிந்த தோஷங்கள், மற்றும் விஷ்ணு பக்தர்களை வெறுப்பதற்குக் காரணமான எனது செயல்கள் விளைவுகளைக் கொளுத்தி என்னை ரக்ஷிக்க வேண்டுகிறேன்.

**ஸுலோகம் 14, 15 (வைச்வதேவ, பலிஹரணம்)**

१४. वैश्वदेवं बालिं चैव कुर्यात् नित्यं तदर्पणम् ।
इष्टं दत्तं हुतं जप्तं पूर्तं यच्च आत्मन: प्रियम् ॥ (१४)

१५. दारान् सुतान् प्रियान् प्राणान् परस्मै सन्निवेदयेत् ।

**14. வைச்வதேவம் பலிம்** Chaiva **குர்யாத், நித்யம் ததர்ப்பணம்**
**இஷ்ட்டம், தத்தம், ஹுதம், ஜப்தம், பூர்த்தம் யச்ச ஆத்மன: ப்ரியம்॥**

**15. தாரான் ஸுதான் ப்ரியான் ப்ராணான் பரஸ்மை ஸன்னிவேதயேத்।**

**வைச்வதேவம், பலிம்** Chaiva = வைச்வ தேவ, மற்றும் பலிஹரணத்தை **குர்யாத்** = செய்து **ததர்ப்பணம்** = பகவானுக்கு அர்ப்பிக்க வேண்டும். **இஷ்டம், தத்தம், ஹுதம், ஜப்தம்** = நாம் செய்த யக்ஞ-யாகம், மற்றும் நாம் மனம் உவந்து செய்த இஷ்டமான நற்காரியங்கள்,

தானம், ஹோமங்கள், ஜபங்கள். 'பூர்த்தம்' என்றால் குளம், சத்திரம் கட்டுதல் போன்ற பொது நன்மைச் செயல்கள் **ஆத்மன: ப்ரியம்** = நமக்குப் பிரியமான உணவு, பழம், நீர்போன்ற பொருள்கள். **(சுலோகம் 15ல் உள்ள) தாரான், ஸுதான்** = மனைவி மக்கள், **ப்ரியான்** = மிகப் பிரியமான **ப்ராணன்** = நம் உயிரையும் கூட **பரஸ்மை** = ஸர்வோத்தமனான பரமாத்மானுக்கு **ஸன்னிவேதயேத்** = ஸமர்ப்பிக்க வேண்டும்.

## வைச்வ தேவ

நைவேத்யம் செய்த அன்னத்தினால் வைச்வ தேவ மற்றும் பலி ஹரணம் செய்ய வேண்டும்.

तत्प्रीत्यर्थं विना, अन्यस्मै न उदबिन्दुं न तण्डुलम् ॥

'பரமாத்ம - ப்ரீதிக்காக' என்னும் நோக்கம் இல்லாமல், ஒரு சொட்டு நீரோ, ஒரு மணி அரிசியோ தானம் கொடுத்துப் பிரயோஜனம் இல்லை.

வைச்வம் என்பது, 'பஞ்ச-ஸுனா' தோஷபரிஹாரத் திற்காக ஏற்பட்டது. (1) தான்யம், காய்கறிகளைக் கத்தரிப்பது, (2) அரைத்தல், (3) வறுத்தல், (4) வேகவைப்பது, (5) தணலில் சுடுதல்; இவை பஞ்ச ஸுனா தோஷங்கள். அல்லது ஐந்து வகையான ஜீவ ஹிம்சைகள். நம்மை அறியாமல் செய்த இந்த தோஷ-பரிஹாரத்திற்காகச் செய்வது வைச்வதேவ. துளசீதளத்தைச் சேர்க்காமல் வைச்வதேவ செய்யலாகாது. வைச்வதேவ செய்யாமல் சாப்பிடலாகாது. ஆனால் பிக்ஷுக்களுக்கு அன்னம் அளித்தால், அந்த தோஷம் பரிஹாரம் ஆகிறது.

### பிக்ஷுகர் யார்?

(1) யதிகள், (2) பிரம்மசாரிகள் (3) வித்தைக்காக குரு-போஷணையில் இருப்பவர்கள் (4) பயணிகள் (5) ஏழை

கள், இந்த ஐந்து வகையைச் சார்ந்தவர்கள் பிக்ஷுகர்கள். இவர்களில் யாருக்கேனும் அன்னதானம் அளித்தால், வைச்வதேவ செய்த பலன் கிட்டுகிறது. வீட்டிற்கு வந்த பிக்ஷுகனுக்கு அன்னம் கொடுக்காத தோஷம் வைச்வதேவம் செய்வதினால் பரிஹாரம் ஆவதில்லை.

अकृते वैश्वदेवे तु भिक्षुके गृहमागते।
उद्धृत्य वैश्वदेवार्थं भिक्षां दत्वा विसर्जयेत्॥

वैश्वदेव अकृतं दोषं शक्त्यै भिक्षु व्यपोहितुम्।
न तु भिक्षु दोषं वैश्वदेवो व्यपोहति॥

यतिश्च ब्रह्मचारी च विद्यार्थं गुरु पोषकः॥
अध्वगः क्षीणिवृत्तिश्च षडेते भिक्षुकाः स्मृताः।

## பலி ஹரண, கோ-க்ராஸ.

வீட்டுவாயிற்படி போன்ற இடங்களில் நிற்கும் தேவதைகளை நினைவில் வைத்துக்கொண்டு பலிஹரண செய்ய வேண்டும். சாண்டாள, பதித, காக்கை இவர்களுக்கு மூன்று பலிகளை அளிக்கவேண்டும். சண்டாளர் என்றால் விஷ்ணு பக்தர்களான சண்டாளர்கள். 'பதிதர்கள்' என்றால் புத்தி பூர்வமாக அல்லாமல் புத்தி மோஹத்தினால் மஹா பாதகங்களைப் புரிந்தவர்கள். இவர்களைத் தவிற, குறிப்பிட்ட மற்ற எல்லா பூத (பிராணி)களுக்கும் பலி அளிக்கவேண்டும். பலிஹரணம் ஆன பிறகு, பசுவிற்கு புல், நீர் அளித்து பிரதக்ஷிணை நமஸ்காரம் செய்து, பிறகு தீர்த்தம் எடுத்துக் கொள்ளவேண்டும்.

## பஞ்சமஹா யக்ஞம்

(1) பிரம்ம-யக்ஞ, (2) பித்ரு-யக்ஞ, (3) தேவ-யக்ஞ, (4) பூத-யக்ஞ, (5) மனுஷ்ய-யக்ஞ. இவை பஞ்ச மஹா

யக்ஞங்கள். தெய்வ மஹிமையைக் கூறும் சாஸ்திரங்களை மற்றவர்களுக்கு கற்பித்தலே[1] பிரம்ம யக்ஞ. தர்ப்பணம் = யக்ய, [3]ஹோமம=தெய்வ யக்ஞ. பலிஹரண[4]= பூத யக்ஞ. விருந்து அளித்தல் மனுஷ்ய யக்ஞ.[5]

अध्यापनं ब्रह्मयज्ञो पितृ-यज्ञस्तु तर्पणम्।
होमो दैवो बलिर्भूतो, नृ-यज्ञो अतिथि-पूजनम्॥

## தீர்த்த - ப்ராசனம்

தீர்த்தம் என்பது பரமாத்மனின் பாத-நீர் (சரண-அம்ருதம்) ஆகும். இதை முதலில் தலையில் புரோக்ஷணை செய்துக்கொண்டு பிறகு மூன்று தடவை தீர்த்தம் உட்கொள்ளவேண்டும். (1) உடல் தூய்மை, (2) தர்ம ஸாதனம். (3) மோக்ஷ-ஆனந்தம் கிடைப்பதற்காக மூன்று முறை தீர்த்தம் உட்கொள்ளுகிறோம்.

प्रथमं काय-शुद्धयर्थं, द्वितीयं धर्मसाधनम्।
तृतीयात् मोक्षं आप्नोति एवं तीर्थं त्रिधा पिबेत्॥

தீர்த்தம் உட்கொள்ளும்போது, தரையில் தெறிக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். சப்தித்து உறுஞ்ஜுதல் கூடாது.

## சுலோகம் - 15, 16 (போஜனம்)

१५. भुक्त-शेषं भगवत: भृत्य-अतिथि-पुरस्सर: ॥ (१५)

१६. भुञ्जीत हृद्-गतं विष्णुं स्मरन् तद्गत-मानस:।
आचम्य मूलमन्त्रेण कोष्टं समभि-मन्त्रयेत्॥ (१६)

15. புக்த-சேஷம் பகவத: ப்ருத்ய-அதிதி-புரஸ்ஸர:।

**16. புஞ்ஜீத ஹ்ருத்-கதம் விஷ்ணும் ஸ்மரன் தத்கத-மானஸ:**
**ஆசம்ய மூலமந்த்ரேண கோஷ்டம் ஸமபி மந்த்ர யேத்||**

**பகவத: புக்த-சேஷம்** = பரமாத்மா புசித்தது, அல்லது நிவேதனம் செய்ததை **ப்ருத்ய - அதிதி - புரஸ்ஸர:**= குடும்பத்து பரிஜனங்கள் மற்றும் விருந்தாளிக ளுடன் **ஹ்ருத்-கதம் விஷ்ணும் ஸ்மரன்** = ஹ்ருதயத்திலி ருப்பவரும் ஸாரத்தை புசிப்பவருமான பகவானின் (ஆத்மா, அந்தராத்மா) என்னும் ரூபங்களை தியானித்து **தத்கத-மானஸ:** =அவனிடத்திலேயே மனதை நிருத்தி, வேறு எந்த விஷயங்களையும் மனதிற்குக் கொண்டுவராமல் **புஞ்ஜீத** = சாப்பிடவும். பிறகு **ஆசம்ய** = ஆசமனம் செய்து **மூலமந்த்ரேண** = 'ஓம் நமோ நாராயணாய' என்னும் மூல மந்த்ரத்தினால் **கோஷ்டம்** = வயிற்றை **ஸம்-அபிமந்த்ரயேத்** = தொட்டு மந்த்ரம் ஜபிக்கவும்.

## போஜன முறை

சாப்பிட இலை போடும் போது தரையில், ஈசான்ய (அ) வடகிழக்கிலிருந்து ஆரம்பித்து சதுரமான மண்டலம் செய்க. கிழக்கு நோக்கி மணைமேல் உட்காருக. பிறகு பரிஷேசனம், மற்றும் 'சித்ராஹுதி' அளித்தல். துளசீதளத்து டன் ஒரு உத்தரிணி தீர்த்தம் உட்கொண்ட பிறகு ப்ராண-ஆஹுதி அன்னப் பருக்கைகளை உட்கொள்க. பிரதி கவளம் சாப்பிடும் போது பகவானை ஞாபகப்படுத்திக் கொண்டு உண்ணவேண்டும். 'அம்ருதாபிதானமஸி' என்னும் மந்திரத் தினால் ஒரு உத்தரிணி நீர் உட்கொண்டு சாப்பாட்டை முடித்துக்கொள்க. கை அலம்பி வந்து ஆசமனம் செய்து, ஓம் 'நமோ நாராயணாய' என்று வயிற்றை தொட்டு



ஜபிக்கவும். பிறகு ஒரு முறை தீர்த்தம் ஒரு துளசீதளம் உட்கொள்க. இடது கையினாலும், ஸ்திரீகள் கையினாலும் தாம்பூல வெற்றிலையை வாயில் போட்டுக் கொள்ளலாகாது.

### ச்லோகம் 17 (பிற்பகல் நேரம்)

१७. वेद-शास्त्र-विनोदेन प्रीणयन् पुरुषोत्तमम्।
अहः शेषं नयेत् सन्ध्यां उपासीत, अथ पूर्ववत् ॥ (१७)

**17. வேதசாஸ்த்ர-விநோதேன ப்ரீணயன் புருஷோத்தமம்।**
**அஹஸ்-சேஷம் நயேத் ஸந்த்யாம் உபாஸீத அத பூர்வ-வத்।**

போஜனம் ஆன பிறகு **அஹஸ்-சேஷம் நயேத்** = பகலின் பாக்கி நேரத்தை இவ்வாறு கழிக்கவேண்டும். **வேத-சாஸ்த்ர-வினோதேன** = வேதம், மற்றும் இதர சாஸ்த்ர அப்யாஸம் செய்து **ப்ரீணயன் புருஷோத்தமம்** = புருஷோத்தமனை ப்ரீதி செய்யவும். **அத ஸந்த்யாம் பூர்வ-வத்** = முதலில் கூறியபடி (காலையில் போல) ஸாயம் ஸந்த்யாவந்தனம் செய்க.

பிற்பகலில், வேத நூல்கள், மற்றும் புண்ய சாஸ்த்ர நூல்களைப் பயிலவேண்டும். மற்றவர்களுக்குக் கற்பிக்க வேண்டும்.

### ச்லோகம் 18 (இரவில்)

१८. यामात् परत एवाथ स्वपेत् ध्यायन् जनार्दनम्।
अन्तराले ततो बुद्ध्वा स्मरेत बहुशो हरिम् । (१८)

**18. யாமாத் பரத ஏவாத ஸ்வபேத் த்யாயன் ஜனார்தனம்|**
**அந்தராலே ததோ புத்வா ஸ்மரேத பஹுசோ ஹரிம்||**

**யாமாத் பரத:** =ராத்ரி ஒரு யாமம் கழிந்த பிறகு **ஜனார்த்தனம் த்யாயன்** = ஜனார்த்தனனை தியானித்த வாறு **ஸ்வபேத்** = தூங்கவேண்டும். அந்தராலே புத்வா = மத்தியில் விழித்துக்கொள்ளும்போதெல்லாம் **பஹுச:**= அநேக வகையில் **ஹரிம் ஸ்மரேத** = ஸ்ரீ ஹரியை நினைத்துக் கொள்ளவும்.

## படுக்கும்போது முனிகள் தியானம்

ராத்திரி ஒரு யாமம் ஆவதற்கு முன்பு படுத்துக் கொள்ளல் கூடாது. அப்போது சாஸ்த்ர - அப்பாஸம் செய்ய வேண்டும். படுக்கும்போது, கைகால் அலம்பிக்கொண்டு, பரமாத்மா, மற்றும் குருகளை நினைத்து, **அகஸ்த்ய, மாதவ, முசுகுந்த, கபில, ஆஸ்திக** இந்த ஐந்து முனிகளை நினைவுபடுத்திக் கொண்டு படுக்கவேண்டும். தெற்கு அல்லது கிழக்கில் தலைவைத்துப் படுக்கவேண்டும். வடக்கு திக்கில் தலை வைத்துப் படுக்கலாகாது.

स्व-गृहे प्राक् शिरा: शेते, श्वशुरे दक्षिणे शिर:।
प्रत्यक्-शिरा: प्रवासे तु न कदाचित् उदक् शिरा:॥

சொந்தவீட்டில் கிழக்கில் தலைவைத்துப் படுக்கவேண் டும். மாமனார் வீட்டில் தெற்கே தலைவைத்தும், பிரயாணத் தின்போது மேற்கிலும் தலை வைக்கவேண்டும். ஒரு போதும் வடக்கே தலை வைக்கலாகாது. இரவில் விழிப்பு ஏற்படும்போது, பரமாத்மனை நினைத்துக் கொண்டு கிரு ஹஸ்தாச்ரம தர்மத்தில் ஈடுபடவேண்டும். (ஸ்திரீ சேர்க்கை இங்கு சூசனை செய்யப்படுகிறது.)

## சுலோகம் 19 (ஸர்வ ஸமர்ப்பணம்)

१९. कायेन वाचा मनसेन्द्रियैर्वा
बुद्ध्यात्मना वा अनुसृत: स्वभावम्।
करोमि यद्यत् सकलं परस्मै
नारायणायेति समर्पयेत् तत्॥ (१९)

**19. காயேன-வாசா மனஸேந்த்ரி-யைர் வா**
**புத்யாத்மனா வா அனுஸ்ருத: ஸ்வபாவம்|**
**கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை**
**நாராயணா-யேதி, ஸமர்ப்பயேத் தத்||**

**காயேன** = சரீரத்தினால் செய்த நமஸ்காரங்கள் **வாசா** = வாக்கினால் செய்த துதிகள் **இந்த்ரியை:** = காதால் கேட்ட பகவன்-மகிமை, கண்ணால் பார்த்த விக்ரஹ தரிசனம், முதலானவை **புத்யா** = பகுத்தறிவுடன் செய்த பூஜா காரியங்கள், **ஸ்வபாவம் அனுஸ்ருத:**= எனது ஜீவ ஸ்வரூப யோக்யதையை அனுசரித்து **ஆத்மனா** = ஈச்வர ப்ரேரணையினால் **யத்-யத்-கரோமி** = எந்தெந்த காரியங்களைச் செய்வேனோ, **ஸகலம்** = அந்த எல்லாவற்றையும் **பரஸ்மை நாராயணாய இதி** = ஸர்வ உத்தமன் ஸ்ரீ நாராயணனுக்கு **ஸமர்ப்பயேத் தத்** = ஸமர்ப்பணம் செய்கிறேன்.

காலை எழுந்தது முதல், இரவு படுக்கும்வரை புரிந்த எல்லா காரியங்களையும், அனுஷ்டானங்களையும், ஈச்வர அர்ப்பண புத்தியுடனேயே செய்ய வேண்டும். மேற்குறித்த கருத்து, பாகவத-சுலோகத்தில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. அதையே ஸ்ரீ ஆசார்யர் இங்கு சுட்டிக்காண்பித்து நமக்கு அறிவூட்டுகிறார்.

## 'ஸ்வபாவ' த்திற்கு மற்றொரு அர்த்தம்.

'ஸ்வபாவம் அனுஸ்ருத:' என்பதற்கு மற்றொரு அர்த்தம் உண்டு. 'ஸ்வ-பாவம்' = ஸ்வதந்த்ரனான பரமாத்மனை. 'அனுஸ்ருத:' அனுசரித்து அல்லது அவனுக்கு அதீனனாக என்று பொருள். இப்படிப் பொருள் கூறும்போது 'ஆத்மனா' என்பதற்கு ஜீவன், தன் அருகதைக்கு ஏற்றவாறு என்று பொருள் கூறவேண்டும்.

**அனுஸ்ருத: ஸ்வபாவம்** என்பதற்குப் பதிலாக 'ப்ரக்ருதி ஸ்வபாவாத்' என்று மாற்றுப் பாடம் உண்டு. ப்ரக்ருதி என்று பகவானுக்குப் பெயர். அதேபோல லக்ஷ்மீ தேவி, ஜட ப்ரக்ருதியான பஞ்சபூங்களுக்கும் 'ப்ரக்ருதி' என்ற பெயர் உண்டு. இங்கு இவ்வாறு அர்த்தம்:- பரமாத்மா, லக்ஷ்மீதேவி, வாயுதேவர்களின் பிரேரணை, ஜடப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் எனக்கு ஏற்பட்டிருக்கும் தடைகள் இவற்றிற்கு உட்பட்டு, இவற்றை அனுசரித்து நான் எந்தெந்த காரியங்களைச் செய்கிறேனோ அவற்றையெல்லாம் நாராயணனுக்கு அர்ப்பணம் செய்கிறேன் என்பது மற்றொரு அர்த்தம்.

'பகவத் ப்ரேரணயா, பகவத் ப்ரீத்யர்த்தம்' என்னும் எச்சரிக்கையுடன் எல்லாக் காரியங்களையும் செய்து அவனுக்கே அர்ப்பணம் செய்யவேண்டுமென்பது கருத்து. உலகத்தில் நடக்கும் காரியங்கள் எல்லாமே ஈச்வர சக்தியினால் நடந்து வருகிறது, நான் எப்போதும் அவன் ஆணைக்கு உட்பட்டவன், என்னுடைய அனாதி அருகதைக்கு ஏற்றவாறு எனது கர்மபலனை அனுசரித்து என்னைக்கொண்டு அவன் செய்விக்கும் நற்செய்கைகளை அவனுக்கே நான் சமர்ப்பிக்கிறேன் என்பது உட்கருத்து.

## சுலோகம் 20 (அணுவேதாந்த)

२०. द्वौ इमौ पुरुषौ लोके क्षरश्च अक्षर एव च।
क्षर: सर्वाणि भूतानि कूटस्थ: अक्षर उच्यते ॥२०॥

**20. த்வெள இமெள புருஷெள லோகே க்ஷரஸ்ச அக்ஷர ஏவ ச|**
**க்ஷரஸ் ஸர்வாணி பூதானி கூடஸ்த: அக்ஷர உச்யதே||**

**லோகே**=பரமாத்மானால் நியமிக்கப்படும் பொருள்களில் **இமெள, த்வெள புருஷெள** = இந்த இரண்டு சேதனங்கள் உள்ளன. ஒன்று க்ஷர. மற்றொன்று அக்ஷர. க்ஷர என்றால் நசிக்கக் கூடியது. அக்ஷர = நாசம் அற்றது, விகாரம் அடையாமல் நிலைத்து நிற்பது. **ஸர்வாணி பூதானி** = நான்முக பிரம்மா முதல் எல்லா ஜீவராசிகளும் க்ஷரம் ஆகும். இவர்களின் சரீரம் நசிக்கக் கூடியது. **கூடஸ்த:**= Koota என்றால் ஆகாசம். **'ஸ்த'** = அதைப் போலவே இருக்கின்ற (ஆகாசத்தைப் போலவே இருக்கின்ற), நாசமும், விகாரமும் அற்ற லக்ஷ்மீதேவி அக்ஷர ஆவாள்.

### க்ஷர - அக்ஷர புருஷர்கள்

இந்த சுலோகம் பகவத் கீதை 15வது அத்யாயம் 16-வது சுலோகம். இதற்கு அடுத்து வருகிற சுலோகத்தில் பரமாத்மனின் ஸர்வ உத்தமத்வம் நிரூபிக்கப்படுகிறது. அதற்குப் பீடிகை (முன்னுரை)யாக இங்கு 'க்ஷர' 'அக்ஷர' பாகுபாடு சொல்லப்படுகிறது. இங்கு 'புருஷ' என்றால் சேதன என்று பொருள். ஆகையினால், புருஷனின் பகுதிகளான க்ஷர, அக்ஷர இரண்டும் சேதனங்களே. க்ஷர என்றால் ஜடம் என்றும் அக்ஷர என்றால் ஜீவன் என்றும் பொருள் கூறுவது சரி அல்ல. ஜடம் 'புருஷ' என்று அழைக்கப்படமாட்டாது.

இந்த சுலோகத்திலேயே 'க்ஷர' என்னும் சொல்லுக்கு விளக்கம் இருக்கிறது. 'க்ஷர: ஸர்வாணி பூதானி' என்று விளக்கப்பட்டிருக்கிறது. 'பூத' என்றால், தேஹத்தோடு கூடிய ஜீவர்கள் எனப் பொருள். வெறும் ஜடம் அல்ல.

'பூத' என்பதற்கு ஆகாசம் முதலான பஞ்சபூதம் என்று சில இடங்களில் அர்த்தம் இருப்பினும், இங்கு 'ஸர்வ பூதேஷு' என்று கூறப்பட்டிருக்கிறது. மேலும் 'க்ஷர' என்றால் நசிக்கக் கூடியது என்றும் விளக்கம் தரப்பட்டிருக்கிறது. ஆகையினால் 'க்ஷரபுருஷ' என்னும் சொல்லுக்கு இங்கு தேஹ நாசம் உள்ள ஜீவர்கள் என்றுதான் புரிந்து கொள்ள வேண்டும். அக்ஷர புருஷனின் ஸ்வரூபத்தை விளக்கும் வகையில் 'Kootastha அக்ஷர உச்யதே' என்று இந்த சுலோகத்திலேயே கூறப்பட்டிருக்கிறது.

### கூடஸ்த்த: (Kootastha)= <u>லக்ஷ்மீ</u>

'கூடஸ்த' என்றால் விகாரம் இல்லாத என்று பொருள். ஜீவர்களுக்கு ஸுக, துக்கம் போன்ற விகாரங்கள் உள்ளன. ஆகையால் '<u>அக்ஷர</u>' என்றால் ஜீவ என்று பொருள் கூறுவது சரி அல்ல. அக்ஷர என்றால் விகாரம் இல்லாதவள், தேஹநாசம் இல்லாதவளான சேதன ப்ரக்ருதி, <u>ரமா தேவி</u>. ஆகையால் அக்ஷர புருஷன் ரமாதேவி அல்லது லக்ஷ்மீ. இங்கு 'புருஷ' என்னும் சொல் 'சேதன' என்னும் அர்த்தத்திலே தான் இருக்கிறது. ஆண் என்பது அல்ல. மேலும், புருஷனைப் போலவே சக்தி படைத்த பெண்ணை ஆண்பாலில் குறிப்பிடும் சந்தர்ப்பங்கள் உண்டு. ஆகவே இங்கு 'க்ஷர-புருஷ' என்னும் சொல், தேஹ நாசம் உள்ள பிரம்மா முதலான ஜீவராசிகளைக் குறிக்கின்றது. 'அக்ஷர புருஷ' என்னும் சொல் தேஹநாசமற்ற, விகாரம் அற்ற 'சேதன ப்ரக்ருதி' எனப்படும் லக்ஷ்மீதேவி ஆவாள்.

புருஷ = சேதன

வாயுதேவர் க்ஷரத்தில் உள் அடங்கியவர் ஆனாலும், வேறு சந்தர்பங்களில் அக்ஷரரும் ஆவார். அவருக்கு அபிமானம் இல்லாமல் இருக்கும் காரணத்தால் அவர் அக்ஷரர். அதனால்தான் அவருக்கு 'ஜால-அஜால' எனப் பெயர். ஜால என்றால் ஸம்ஸாரபந்தம், அபிமானத்தினால் ஏற்படும் பந்தம். அஜால என்றால் அது இல்லாமல் இருத்தல். 'ஜாலாஜாலம் மாதரிச்வானமேகம்' என்று கீதாபாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறார் வாயுதேவர்.

**ச்லோகம் 21, 22 (அணுவேதாந்த)**

२१. उत्तम: पुरुषस्तु अन्य: परमात्मा इत्युदाहृत: |
यो लोक-त्रयं आविश्य बिभर्ति अव्यय ईश्वर: (२१)

२२. यस्मात् क्षरं अतीतोऽहं अक्षरादपि च उत्तम: |
अतो ऽस्मि लोके वेदे च प्रथित: पुरुषोत्तम: | (२२)

**21. உத்தம: புருஷஸ்து அன்ய: பரமாத்மா இதி உதாஹ்ருத:|**
**யோ லோக-த்ரயம் ஆவிச்ய பிபர்த்தி அவ்யய ஈச்வர: ||**

**22. யஸ்மாத் க்ஷரம் அதீதோஹம் அக்ஷராதபி ச உத்தம: |**
**அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ||**

**முதல் வரிக்கு அர்த்தம்:-** இந்த க்ஷர மற்றும் அக்ஷர புருஷரைக் காட்டிலும் வேறுபட்டவன் ஸர்வோத்தமன், புருஷோத்தமன். அவனை 'பரமாத்மா' என்று வேதங்கள் கூறுகின்றன. **2வது வரிக்கு அர்த்தம்:-**இந்த புருஷோத்த

Geetha: 15th chapter



மன், பூலோகம், புவர் லோகம், ஸுவர் லோகம் என்னும் மூவுலகத்திலும் இருந்து கொண்டு அவற்றைத் தாங்குதல், காப்பாற்றுதலைச் செய்பவன். **இவன் அவ்யய** = நாசமற்ற வன், **ஈச்வர:**=எண்ணுதற்கரிய சக்தி படைத்தவன் (சுலோகம் 21)

## க்ஷர, அக்ஷரத்தைக் காட்டிலும் உத்தமபுருஷன்

இந்த க்ஷர, மற்றும் அக்ஷரபுருஷர்களைக் காட்டிலும் உத்தமோத்தமனாக இருக்கும் காரணத்தினால், **லோகே** = புருஷர்கள் இயற்றிய நூல்களிலும் **வேதே** = அபௌருஷேய (புருஷர்களால் இயற்றப்படாத) வேதநூல்களிலும் **அஹம் புருஷோத்தம:** = நான் புருஷோத்தமன் என்று **ப்ரதித:** = கூறப்படுகிறேன் என்கிறான் ஸ்ரீ கிருஷ்ணன் (கீதையில்)

க்ஷர, மற்றும் அக்ஷர புருஷர்களைக் காட்டிலும் புருஷோத்தமன் வேறுபட்டவன் என்பது இங்கு கீதா சுலோகத்தின் மூலம் (15/Slo 17, 18) மிகத் தெளிவாக கூறப்படுகிறது. ஆத்மா என்றால் சேதனன். பரமாத்மா என்றால் பரம சேதனன். க்ஷர மற்றும் அக்ஷர புருஷர்கள் சேதனர்களானால், புருஷோத்தமன் பரமசேதனன். இதன் விளக்கத்தை வேதத்தில் 'சேதனஸ் - சேதனா-னாம்' போன்ற வாக்யங்களில் காணலாம். **லோக-த்ரய** = மூன்று உலகங்கள். (பூ:, புவ:, ஸுவ:). **பிபர்த்தி** = தாங்குதல், ரக்ஷித்தல். இதனால் மற்ற காரியங்களான உத்பத்தி முதலான எட்டு காரியங்களையும் கூட இந்த புருஷோத்தமனே செய்பவன் என சூசனை செய்யப்படுகிறது.

இப்படி எல்லாவற்றின் உள்ளேயும் ஊடுருவி நின்று, எல்லாக் காரியங்களையும் செய்விப்பவன் பரமாத்மனே ஆனாலும், அந்தந்த வஸ்துக்கள் நசித்த போதிலும் இவனுக்கு நாசமில்லை. அவை விகாரம் அடைந்த போதிலும் இவன் விகாரமற்றவன். இது இவனது எண்ணுதற்கரிய

அத்புத சக்தியைக் காண்பிக்கிறது. இவன் ஈச்வரன். அதாவது மனதிற்கு எட்டாத அத்புத சக்திபடைத்தவன் என்பது பொருள். இவன் க்ஷர, அக்ஷரத்திற்கும் மேம்பட்டவன். ஸர்வோத்தமன்.

**லோகே** = மஹாபாரதம், புராணங்கள் போன்ற (புருஷ ரால் இயற்றப்பட்ட) நூல்கள் எனப் பொருள். **வேதே** = யாராலும் இயற்றப்படாத வேத நூல்கள். இவை இரண்டி லும் பரமாத்மா புருஷோத்தமன் என்பதை விவரிக்கப்பட்டி ருக்கிறது.

२३. यो मामेवं असंमूढो जानाति पुरुषोत्तमम्।
स सर्ववित् भजति मां सर्वभावेन भारत ॥ (२३)

२४. इति गुह्यतमं शास्त्रं इदं उक्तं मया अनघ।
एतद् बूद्ध्वा बुद्धिमान् स्यात् कृत-कृत्यश्च भारत ॥ (२४)

**23. யோ மாம் ஏவம் அஸம்மூடோ ஜானாதி புரு ஷோத்தமம்।**
**ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வ-பாவேன பாரத॥**

**24. இதி குஹ்யதமம் சாஸ்த்ரம் இதம் உக்தம் மயா அனக।**
**ஏதத் புத்வா புத்திமான் ஸ்யாத் க்ருத-க்ருத்யஸ்ச பாரத॥**

**ய:** = எந்த அதிகாரி **யேவம் அஸம் மூட:** எந்த விதமான அக்ஞானத்திற்கும் ஆளாகாமல். **மாம் புருஷோத் தமம்** = நான் புருஷோத்தமன் என்பதை **ஜானாதி** = அறிகிறானோ **ஸ: ஸர்வ-வித்** = அவன் ஸர்வ சாஸ்திரங்க ளின் உட்கருத்தை அறிந்தவனாக **ஸர்வ பாவேன** = எல்லா

முறைகளிலும் **பஜதி** = என்னைப் பூஜித்து வணங்குவான். (Slo. 23)

**இதி குஹ்யதமம் சாஸ்த்ரம்** = மிகமிக ரகசியமான இந்த சாஸ்த்ர உபதேசத்தை. அதாவது 'ஊர்த்வ மூலம் அதஸ் சாகம்'' ஜகத் என்னும் மரத்திற்கு பரமாத்மனே வேர் என்னும் உபதேசத்தை, (புருஷோத்தமத்வ க்ஞான உபதே சத்தை) இதுவரை ஓ அர்ஜுனா உனக்கு உபதேசித்திருக்கி றேன். **ஏதத் புத்வா** = இதைப் புரிந்து கொண்டு, **புத்திமான் ஸ்யாத்** = அபரோக்ஷ க்ஞானத்தைப் பெறவேண்டும். **க்ருத க்ருத்ய ஸ்யாத்** = மோக்ஷம் என்னும் ஆனந்த பதவியை அடையவேண்டும்.

புருஷோத்தமன் என்பது காரணப் பெயர். அதாவது அவன் க்ஷர - அக்ஷர புருஷர்களைக் காட்டிலும் உத்தமன். பிரம்மா முதலான ஜீவர்கள், மற்றும் லக்ஷ்மீயைக் காட்டி லும் உயர்ந்தோன். எல்லோரையும் அவரவர் காரியங்களில் நியமனம் செய்கிறான். ஆகையால் இவன் நியாமகன். இவை அனைத்தையும் புரிந்துகொள்வதே ஸர்வ சாஸ்த்ரங்க ளிலும் உட்கருத்து. இந்த அறிவு உதயம் ஆனால் தான் ஸர்வ சாஸ்த்ரங்களையும் கற்ற பலன் கிட்டும். அருகதை உள்ள தகுதியாளர்கள் மட்டுமே இதைப் புரிந்து கொள்ளும் அறிவுபடைத்தவர்கள். ஆகவே இது மிக ரகசியமாக அவர்களுக்கு மட்டுமே உபதேசிக்கத் தக்கது. ஏனெனில் அவர்கள் மட்டுமே இதில் கண்ணும் கருத்துமாக இருந்து இதனால் பயன் அடைகிறார்கள். மற்றவர்களுக்கு அச்சக்தி யில்லை.

பரமாத்மா இந்த உலகிற்கு ஆதாரமாக நிற்கிறான். எல்லாப் பிராணிகளுக்கும் அவன் நியாமகன் (ஆணையா ளன்). எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தோன் என்பதைக் காணுவதே இந்த ரகசியமான அறிவு ஆகும். இதுவே ப்ரமேயம். நாம் செய்யும் காரியங்களையெல்லாம் அவனே

நம் கையினால் செய்விக்கிறான். நாம் செய்து முடிக்கும் எல்லாக் காரியங்களையும் அவனுக்கு அர்ப்பணம் செய்து கடமையைச் செய்தவர்களாக ஆகவேண்டும். வாழ்க்கையில் மனஸ் சாந்திக்கு இது ஒன்றுதான் உயர்ந்த மார்கம்.

காலை எழுந்தது முதல் படுக்கும் வரை நாம் செய்யும் எல்லாக் காரியங்களையும் எந்த முறையில் செய்து முடிக்க வேண்டும் என்னும் அறிவுரையை ஸ்ரீ ஆசார்யர் இங்கு, கீதா சுலோகத்தின் மூலம் நமக்கு உபதேசம் செய்கிறார். வாழ்க்கையை நாம் எப்படி சீர் அமைத்துக் கொள்வது என்பதற்கு வெற்றிப் பாதையை நமக்கு ஸ்ரீ ஆசார்யர் இங்கு காண்பித்திருக்கிறார். ஸதா காலமும் இது நம் எண்ணத்தில் நிற்கவேண்டும் என்பது தான் ஸதாசார ஸ்ம்ருதியின் முக்ய நோக்கம்.

எல்லா உபநிஷத்துக்களின் ஸாரம் பகவத் கீதை. கீதையின் ஸாரம் (15-வது அத்யாயம் அதாவது) புருஷோத்தம் அத்யாயம். இந்த அத்யாயத்தின் ஸாரம்தான் அதன் கடைசீ நான்கு சுலோகங்கள். இதை 'அணு வேதாந்த' என்றும் கூறுவதுண்டு. அவ்வளவு அதிமுக்யமான விஷயமாகையால் ஸ்ரீ ஆசார்யர் இங்கு ஸதாசார ஸ்ம்ருதியில் மிக அவசியமாகக் கருதி, உபதேசித்திருக்கிறார். தாம் இயற்றிய பெரும்பாலான நூல்களில் ஸ்ரீஆசார்யர் இந்த கீதா சுலோகங்களை சுட்டிக்காட்டியிருக்கிறார்.

### சுலோகம்-25 (தாரதம்யம்)

२५. रुद्रं समाश्रिता देवा: रुद्रो ब्रह्माणं आश्रित:।
ब्रह्मा मामाश्रितो नित्यं नाहं कञ्चित् उपाश्रित:॥ (२५)

**25. ருத்ரம் ஸமாச்ரிதா தேவா: ருத்ரோ ப்ரம்மாணம் ஆச்ரித:।**
**ப்ரம்மா மாமாச்ரிதோ நித்யம் நாஹம் கஞ்சித் உபாச்ரித:॥**

**தேவா: ருத்ரம் ஸமாச்ரிதா:** = இந்திரன் முதலான தேவர்கள் ருத்ர தேவரை அண்டினவர்கள். **ருத்ர: பிரம்மா ணம் ஆச்ரித:**= ருத்ர தேவர் நான்முகப் பிரம்மாவை அண்டியிருப்பவர். **பிரம்மா மாம் ஆச்ரித:** = நான்முகப் பிரம்மா லக்ஷ்மீதேவி மூலமாக என்னை (பரமாத்மனை) **நித்யம்** = எப்போதும் அண்டியிருக்கிறார். **ந அஹம் கஞ்சித் உபாச்ரித:** = நான் யாரையும் அண்டி நிற்க வில்லை.

எல்லா தேவர்களும் பரமாத்மனை அண்டியிருப்பவர் கள், பரமாத்மா யாரை அண்டி நிற்கவில்லையென்று இந்த சுலோகம் விளக்கம் கூறுகிறது. இதனால் ஸ்ரீ ஹரி ஸர்வோத் தமன் என்பது சுட்டிக்காட்டப்படுகிறது. இந்திரன் முதலான தேவர்கள் ருத்ர தேவரையும், ருத்ரதேவர் பிரம்மாவையும், பிரம்மா, லக்ஷ்மீ மூலமாக பரமாத்மாவையும், அண்டியிருப் பவர்கள் என்று விளக்கம் கூறி தார-தம்யம், உயர்வு - தாழ்வு இங்கு தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது. இதனால் புரிந்து கொள்ள வேண்டிய முக்ய விஷயம் என்னவென் றால், ருத்ர தேவரோ, பிரம்ம தேவரோ ஸர்வோத்தமர் அல்ல, விஷ்ணு ஒருவனே ஸர்வோத்தமன் என்னும் உயர்ந்த தத்துவம்.

२६. ये मे मतमिदं नित्यं अनुतिष्ठन्ति मानवा:।
श्रद्धावन्त: अनसूयन्त: मुच्यन्ते तेऽपि कर्मभि: ॥ (२६)

२७. ये तु एतद् अभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम्।
सर्व-ज्ञान - विमूढान् स्तान् विद्धि नष्टानचेतस: ॥ (२७)

**26. யே மே மதம் இதம் நித்யம் அனு-திஷ்ட்டந்தி மானவா: |**
**ச்ரத்தா-வந்த: அனஸூயந்த: முச்யந்தே தேபி கர்மபி: ||**

**27. யே து ஏதத் அப்யஸூயந்தோ ந அனுதிஷ்ட்டந்தி மானவா: |**
**ஸர்வ-க்ஞான விமூடான் தான் வித்தி நஷ்ட்டான் அசேதஸ: ||**

கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லும் இதை ஸ்ரீ மத்வர் வாக்காகவும் இங்கு எடுத்துக்கொள்ளவேண்டும். யே மானவா:= எந்த மனிதர்கள் **மே இதம் மதம்** = எனது இந்த உபதேசத்தை **சிரத்தா வந்த:** = அக்கரை உள்ளவர்களாகவும் **அனஸூயந்த:** = வெறுப்பு இல்லாமலும் **நித்யம் அனுதிஷ்ட்டந்தி** = தினமும் கடைப்பிடித்து நடக்கிறார்களோ, **தேபி** = அவர்கள் முக்தி என்னும் ஆனந்த நிலையை அடைவார்கள்.

**யே து ஏதத் அப்யஸூயந்த:**= எவர்கள் இதை வெறுத்து **மே மதம் ந அனுதிஷ்ட்டந்தி** = எனது உபதேசத்தை அனுஷ்ட்டானம் செய்வதில்லையோ **தான்** = அவர்களை **அசேதஸ:** பகுத்தறிவு இல்லாதவர்கள் என்றும், **ஸர்வ-க்ஞான விமூடான்** = அவசியம் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயத்தில் அறிவீனர்கள் என்றும், **நஷ்ட்டான்** = நரகத்திக்கு அருகதை உள்ளவர்கள் என்றும் **வித்தி** = அறிவாயாக.

ஸ்ரீமத்வர் இந்த நூலின் மங்கள சுலோகம் என்னும் முதல் சுலோகத்திலேயே, பலன் எதிர்பாராமல் நமது கடமைகளைச் செய்து அவற்றை பரமாத்மனுக்கு அர்ப்பித்து, அவன் அருளால் நல்லறிவு பெற்று அதன் மூலம்

முக்தி அடைய வேண்டுமென்று உபதேசித்திருக்கிறார். பிறகு, அனுஷ்ட்டானம் செய்ய வேண்டிய காரியங்களை விவரித்து பரமாத்மா எவ்வாறு ஸர்வோத்தமன் என்பதை கீதா சுலோகங்கள் மூலம் எடுத்துக் கூறினார். இப்போது, நம் செயல்களை பகவானுக்கு ஸமர்ப்பணம் செய்வோருக்குக் கிடைக்கும் பலன், ஸமர்ப்பணம் செய்யாதவர்களுக்கு ஏற்படும் நஷ்ட்டம் இவற்றைக் குறிப்பிடும் மேற்குறித்த இரண்டு சுலோகங்களையும் காண்பித்திருக்கிறார். (கீதை அத்யாய 3, சுலோ-31, 32)

இப்படி, 'நான் செய்கிறேன்' என்னும் அபிமானத்தை விட்டு, நாம் செய்யும் கர்மா நிவிருத்த கர்மா. இதே வித்வத்-கர்மா. அதாவது க்ஞானியானவன் அபிமானத்தைத் துறந்து, செய்த கர்மா. பலன் எதிர்பாராமல், உள் அறிவுடன் செய்த கர்மா நிவிருத்த கர்மா ஆகிறது. (निष्कामं, ज्ञानपूर्वं तु निवृत्तं इह च उच्यते)

நிவிருத்த கர்மாவை இவ்வாறு செய்யவேண்டும் என்னும் இந்த உபதேசத்தை சிரத்தையுடன், வெறுப்பு இன்றி எவர் அனுஷ்ட்டிப்பார்களோ, அவர்களுக்கு க்ஞானம் மற்றும் பிரஸாதத்தின் மூலம் முக்தி கிடைக்கின்றது.

நிவிருத்த அல்லது நிஷ்காம கர்மாவைச் செய்வது கடினம் என்று வெறுத்து, அதை அனுஷ்டிப்பதில்லையோ, இந்த உபதேசத்தைக் கைவிடுவார்களோ, அவர்கள் விவேகம் அற்றவர்கள். ஸ்ரீஹரி ஸர்வ உத்தமன், ஸர்வ நியாமகன் என்னும் அறிவு அற்றவர்கள் ஆவார்கள். அதனால் அவர்களுக்கு நரக வாசம் தவிர்க்க முடியாதது என்பது மேற்குறித்த இரண்டு சுலோகங்களின் ஸாரம் (சுலோ 26. 27). நித்யமும் நாம் காரியங்களைச் செய்யும்போது இந்த உபதேசம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டுமென்பது கருத்து.

२८. द्वौ भूत-सर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च।
विष्णुभक्ति - पर: दैवो विपरीत: तथा आसुर: ॥ (२८)

**28. த்வெள பூத - ஸர்கெள லோகே அஸ்மின், தைவ ஆஸுர ஏவ ச|**
**விஷ்ணுபக்தி-பர: தைவோ, விபரீத: ததா ஆஸுர: ||**

**அஸ்மின் லோகே** = இந்த உலகத்தில், **பூதஸர்கெள** = ஜீவர்களின் இயற்கைச் சுபாவங்கள் **த்வெள** - இரண்டு விதம். **தைவ, ஆஸுர ஏவ ச** = (1) தெய்வ ஸ்வபாவம் (2) அஸுர - ஸ்பாவம். **விஷ்ணுபக்தி-பர: தைவ:**= ஸாத்விகர்களான, நற்குணம் படைத்த ஜனங்கள் தைவ - ஸ்வபாவம் உள்ளவர்கள். இவர்கள் விஷ்ணு-பக்தர்கள். முக்திக்கு அருகதை உள்ளவர்கள். **ததா விபரீத: ஆஸுர:**= முக்திக்கு அருகதை அற்ற, விஷ்ணு பக்தி இல்லாத, துர்ஜனங்கள் அஸுர ஸ்பாவம் உள்ளவர்கள்.

## ஏன் இரண்டு வித ஜீவர்கள்?

இதற்கு முன் கூறப்பட்ட பகவத் கீதையின் இரண்டு சுலோகங்களில் (III 31,32) நிஷ்காம கர்மாவைச் செய்யவேண்டும் என்ற பகவானின் உபதேசத்தை அனுஷ்டிப்பவர்கள், முக்தி அடைவார்கள்; அனுஷ்ட்டிக்காதவர்கள் நரகம் எய்துவர் என்று கூறப்பட்டது. இப்படிச் சிலர் அனுஷ்ட்டானம் செய்பவர்கள், மற்றும் சிலர் அனுஷ்ட்டிக்காதவர்கள் என்று இருவகையாக இருப்பதற்குக் காரணம் என்ன? இந்த சுலோகத்தில் ஸ்ரீ மத்வர் இதற்கு விளக்கம் தருகிறார்.

பரமாத்மனிடத்தில் பக்தி செய்வது ஸத்வ குணம் படைத்த நல்லோரின் சுபாவம். அவனை வெறுப்பது ராஜஸ

மற்றும் தாமஸ குணமுள்ளவர்களின் சுபாவம். இப்படிச் சுபாவ வேறுபாட்டினால் தான், நல்லோர்கள் ஸ்ரீஹரியின் உபதேசத்தைக் கடைப் பிடிக்கிறார்கள். தீய குணம் படைத்தோர் அந்த உபதேசத்தைக் கடைப்பிடிப்பதில்லை. அதை வெறுக்கிறார்கள். இதை ஸ்காந்த புராணம் இவ்வாறு வர்ணிக்கின்றது.

दैवीं एव संपत्तिं देवा अभिगच्छन्ति आसुरीमेवच असुरा:।
न एतयो: अभिभव: कदाचित् स्वभाव एव हि अवतिष्ठते॥
—स्कान्दे

## விதி நிஷேத:

२९. स्मर्तव्य: सततं विष्णु: विस्मर्तव्यो न जातुचित्।
सर्वे विधि-निषेधा:स्यु:, एतयोरेव किङ्करा:॥ (२९)

***29. ஸ்மர்த்தவ்ய: ஸததம் விஷ்ணு: விஸ்மர்த்தவ்யோ ந ஜாதுசித்।***
***ஸர்வே விதி நிஷேதா: ஸ்யு: ஏத யோரேவ கிங்கரா:॥***

**விஷ்ணு: ஸததம் ஸ்மர்த்தவ்ய:**= பரமாத்மனை எப்போதும் நினைக்க வேண்டும். **விஸ்மர்த்தவ்யோ ந ஜாதுசித்** = அவனை எப்போதும் மறக்கலாகாது. **ஸர்வே விதி நிஷேதா:**= எல்லா விதி-நிஷேதங்களும். அதாவது சாஸ்த்ரத்தில் கூறிய விதி முறைகள். 'விதி' என்றால் 'இதை செய்' என்று சாஸ்திரம் கூறும் செயல்கள். ''நிஷேதம்'' என்றால் 'இதைச் செய்யாதே'' என்று சாஸ்த்திரம் விலக்கிய செயல்கள். **ஏதயோரேவ கிங்கரா—ஸ்யு:** = இந்த விதி - நிஷேதங்களுக்கு ஸேவகர்களாக நிற்பவை.

'ஸ்மர்த்தவ்ய': என்பது விதி அல்லது ஆணை. 'ந விஸ்மர்த்தவ்ய:' என்பது நிஷேதம் அல்லது விலக்கு. அதாவது 'மறந்து போகாதே' என்று மறப்பதை விலக்கித் தடைசெய்வது நிஷேதம். சாஸ்திரம் கூறும் இந்த விதி, நிஷேதங்களின் கருத்து என்ன? பரமாத்மாவை எப்போதும் நினைத்தவண்ணமே எல்லா காரியங்களையும் செய்வாயாக என்பது 'விதி' (ஆணை). காரியங்களை 'நான் செய்கிறேன்' என்னும் தவறான அஹங்காரத்தைச் 'செய்யாதே' என்பது விலக்கு அல்லது நிஷேதம். இவ்வாறு விஷ்ணு-நினைவை ஊட்டுவதற்கு விதியும் விஷ்ணு-மறதியை விலக்குவதற்காக நிஷேதமும் உதவுகின்றன. (சேவை செய்கின்றன)

சாஸ்திரங்களில் கூறப்பட்ட விதி, நிஷேதங்கள் (அணை, விலக்கு) பரமாத்மனின் உத்தரவுகள். ஆகவே அவன் நினைவு இன்றி செய்த விதிபூர்வமான காரியங்கள் பலன் அளிக்கா. விதிகள் (ஆங்கிலத்தில் DOs) பரமாத்மனின் சேவகர்கள். ஹரியை மறந்த போதுதான் மனிதன் நிஷித்த-காரியங்களைச் செய்கிறான். ஆகவே, நிஷித்த காரியங்கள் அவனது மறதிக்கு சேவகர்கள். (DONTs or Nishiddhas are the servants bringing forgetfulness of God.) நிஷித்தச் செயல்களை விலக்குவதால், விஷ்ணு-மறதி ஏற்படுவதில்லை. இதனால் நாம் ஆபத்துக்கு ஆளாவதில்லை. ஆகவே விஷ்ணு-ஸ்மரணை மிக முக்யம் என்பது கருத்து.

३०. धर्मो भवति अधर्मोऽपि कृतो भक्तैः तवाच्युत।
पापं भवति धर्मोऽपि यो न भक्तैः कृतो हरेः॥ (३०)

30. தர்மோ பவதி அதர்மோऽபி க்ருதோ பக்தை: தவாச்யுத।
பாபம் பவதி தர்மோऽபி யோ ந பக்தை: க்ருதோ ஹரே:॥

**அச்யுத** = ஓ, அச்யுதனே. **தவ-பக்தை: க்ருத:** = உனது பக்தர்கள் செய்த **அதர்மோऽபி** = அதர்மம் போலத் தோன்றும் காரியங்கள் **தர்மோ பவதி** = தர்ம பலனைக் கொடுக்கிறது.

**ய: ந பக்தை: க்ருத தர்மோபி** = உனது பக்தரல்லாதவர்கள் தர்மத்தைப் போலத் தோன்றும் காரியங்களைச் செய்தாலும் அது அதர்ம பலனையே கொடுக்கும்.

விஷ்ணு-பக்தர்கள் ஏகாதசி தினம் சிராத்தம் செய்வதில்லை. இது அதர்மத்தைப் போலத் தோன்றும். ஆனால் இது அதர்மம் அல்ல. தர்மமே ஆகி தர்ம-பலனைக் கொடுக்கிறது. இதே போல, விஷ்ணு-பக்தர் அல்லாதவர்கள் ஏகாதசி தினம் சிராத்தம் செய்வர். இது தர்மத்தைப் போலத் தோன்றும். ஆனால் இது அதர்மம். இதனால் அனர்த்தம் விளையும்.

இன்னும் சில நேரங்களில் புத்திமோஹத்தினால் விஷ்ணு பக்தர்கள் அதர்மம் செய்யக் கூடும். உதாரணமாக அஹல்யைக்கு புத்தி மோஹம் ஏற்பட்ட கதை. விஷ்ணு பக்தளான அவளுக்கு பரிஹாரம் கிடைத்தது. இந்திரன் விருத்ராஸுரனைக் கொன்றது கூட அதர்மம் அல்ல.

३१. मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु।
नित्यं भवेत् च मन्निष्ठः बुभूषुः पुरुषस्तथा॥ (३१)

**31. மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு।**
**நித்யம் பவேத் ச மன்நிஷ்ட்ட: புபூஷு:। புருஷஸ் ததா॥**

**மன்மனா பவ** = என்னிடத்திலேயே மனதை நிறுத்து. **மத்-பக்த :**= என் பக்தனாக இரு. **மத்யாஜீ**=என் பூஜையைச்

செய். **மாம் நமஸ்குரு** = என்னை வணங்கு. **புபூஷு: புருஷ:** = முக்தி சுகத்தை அனுபவிக்க விரும்பும் புருஷன் **நித்யம்** = எப்போதும் **பவேத் ச மன்நிஷ்ட்ட:** = என் மனத்தினனாகவே இருப்பாயாக.

இதற்கு முந்திய சுலோகங்களில் பகவான் எப்படி ஸர்வோத்தமன், ஸர்வ நியாமகன் (ஆணையிடுபவன்) என்பதை விளக்கம் கூறி, பகவத் பக்தியின் பலன், மஹிமைகளையும் எடுத்துக்கூறி, இந்த சுலோகத்தில் இவ் வாறு அறிவுறுத்துகிறார். பகவத் பக்தியினால்தான் எல்லா அனுஷ்டானங்களையும் செய்ய வேண்டும் என்று உபதேசிக் கிறார். இச்சுலோகத்தின் முதல்வரி (பூர்வ-அர்த்தம்) கீதை யைச் சேர்ந்தது (9-34) இரண்டாவது வரி (உத்தரார்த்தம்) ஆசார்யரின் வாக்கு. ஆயினும் இதுகூட வேறு நூலில் இருந்து எடுத்து இங்கு பிரமாணமாகக் குறிக்கப்பட்டிருக்கி றது என்பது சான்றோர் பலரின் கருத்து. ஏனெனில், ஸதாசார ஸ்ம்ருதி சுலோகங்கள் 19 முதல் 30 வரையிலுள்ள சுலோகங்கள் கீதை, மற்றும் பாகவதத்திலிருந்தும் ப்ரமாண வசனங்களாக இருப்பதால் 31வது சுலோகத்தின் 2-வது வரி கூட அதே போல பிரமாண வசனம்தான் என்று வியாக்யான காரர்கள் கருதுகின்றனர்.

## ஆச்ரம தர்ம

३२. एष-नित्य: सदाचारो गृहिणो वनिनस्तथा।
वैश्वदेवं बलिं दन्तधावनं चापि ऋते वटो:॥ (३२)

**32. ஏஷ நித்ய: ஸதாசாரோ க்ரிஹிணோ வனினஸ்-**
**ததா।**
**வைச்வ தேவம் பலிம் தந்த தாவனம் சாபி** (Chuu)
**ரிதே வடோ:॥**

**நித்ய: ஸதாசார:**= சௌச, ஆசமனம் போன்று இதுவரை விளக்கம் செய்த ஸதாசாரம் **க்ருஹிண:**= கிருஹஸ்தாச்ரமிகளுக்கும், **வனினஸ் ததா**= வானப்ரஸ்த ஆச்ரமிகளுக்கும் பொருந்தும். **வடோ:**= ஆனால் பிரம்மசாரி களுக்கு **வைச்வதேவம், பலிம்** = வைச்வதேவ, பலிஹரண **தந்த-தாவனம் ரிதே** = குச்சியினால் பல் துலக்குவது இம்மூன்று தவிர மற்றவை அனைத்து ஸதாசாரமும் பொருந்தும்.

இதுவரை முக்யமாக இல்லறம் நடத்தும் கிருஹஸ்தாச்ர மிகள் அனுசரிக்கவேண்டிய ஸதாசாரங்களை எடுத்துக் கூறினார். இவற்றில் பெரும்பாலும் வானப்ரஸ்தர்களுக்கும் பொருந்தும் என்று இப்போது இங்கு உபதேசிக்கிறார். ஆனால் எவை பொருந்தாது என்பதை தர்மசாஸ்திரங்களின் மூலம் அறிய வேண்டும். இது சுருக்கமான சிறு நூல் ஆதலால் எல்லாவற்றையும் ஸ்ரீ ஆசார்யர் இங்கு எடுத்துக் கூறவில்லை. இதே போல பிரம்மசாரிக்கும் கூட எல்லாம் பொருந்துவதில்லை.

இந்தக் கலியுகத்தில் வானப்ரஸ்த ஆச்ரம நியமம் கிடையாது என்று யாக்ஞவல்க்யர் கூறியிருக்கிறார். எல்லோ ரும் அந்தந்த யுக தர்மங்களை மட்டும் அனுசரிக்கவேண்டும். கலியுகத்தில் கீழ் குறிப்பிட்டுள்ள தர்மங்கள் கிடையாது, வானப்ரஸ்த ஆச்ரம, ஸஹ-கமனம், ஸுரா-பானம், வேறு வர்ணத்தவருடன் விவாஹம், மரண-பிராயச் சித்தம், மது பர்க்க பூஜையில் மாமிஸம் கொடுப்பது. குழந்தையைக் கொடுத்து மற்றவர் குழந்தையை ஏற்றுக் கொள்ளுதல், தீர்க-கால பிரம்மசர்யம், நரபலி, அச்வமேத யாகம் முதலி யின.

## ஸன்யாஸிகளின் தர்மம்

३३. एवमेव यते:स्वीय-वित्तेन तु विना सदा।
मूलमन्त्रै: सदा स्नानं विष्णोरेव च तर्पणम्॥ (३३)

३४. विशेषो निष्क्रिय-यतेः अजला-ञ्जलिता तथा।
तर्पणं तु हरेरेव यतेः अन्यस्य चोदितम्॥ (३४)

**33. ஏவமேவ யதே: ஸ்வீய வித்தேன து வினா ஸதா| மூல மந்த்ரை: ஸதா ஸ்நானம் விஷ்ணோரேவ ச தர்ப்பணம்|**

**34. விசேஷோ நிஷ்க்ரிய யதே: அஜலாஞ்-ஜலிதா ததா| தர்ப்பணம் து ஹரே-ரேவ யதே: அன்யஸ்ய சோதிதம்||**

**யதே:=** Kuteechaka, பஹூதக, ஹம்ஸ, பரமஹம்ஸ என்னும் நான்கு வகையான ஸன்யாஸிகளும், **ஸ்வீய-வித்தேன வினா=** தானே ஸம்பாதித்த வஸ்துக்களின் உதவி இல்லாமல், யாசித்து, மற்றவர்கள் அளித்த வஸ்துக்களை உபயோகித்து கொண்டு, தேவ பூஜா முதலான காரியங்களைச் செய்து கொள்ளவேண்டும். **மூல மந்த்ரை:-** ஓம்கார, 'ஓம் நமோ நாராயணாய' என்னும் மூல மந்த்ரங்களினால், **ஸ்நானம் விஷ்ணுரேவ ச தர்ப்பணம்** = ஸ்நானம், மற்றும் பரமாத்மனுக்கு அர்க்யம் முதலானவைகள் உண்டு. (சுலோகம் 33)

**நிஷ்க்ரிய-யதே:=** ஹோமம் போன்ற க்ரியைகள் அற்ற, ஹம்ஸ, பரமஹம்ஸ என்னும் இருவகை ஸன்யாஸிகளுக்கு **விசேஷ:** ஒரு விசேஷம் உண்டு. அதாவது, அவர்களுக்கு ப்ரம்ம-யக்ஞ முதலான பஞ்ச மஹா யக்ஞ காரியம் இல்லை. அவர்கள் ஸ்ரீ ஹரிக்கு அர்க்யம், தர்பணம் மட்டும் அளிக்கவேண்டும்.

## நான்குவித யதிகள்

மேற்கூறியவாறு யதிகளில் நான்கு வகை உண்டு. சிகை, யக்ஞோபவீதம் இருந்து, த்ரி-தண்டதாரிகளாக, கமண்டலம் பிடித்து உயிருள்ளவரை மகன் அளிக்கும் அன்னத்தை ஏற்றுக்கொண்டு வாழ்பவர் குடீசகர் (Kuteechakar)

த்ரி-தண்டியாக, புத்ரர்களை விட்டு, பிக்ஷா அன்னத்தினால் ஜீவிப்பவர்கள் பஹூதரர்கள். மேற்கூறிய இருவருக்கும் ஸந்த்யாவந்தன முதலான கர்மாக்கள் உண்டு.

ஒரே தண்டம் உள்ளவராக, கௌபீனம் தரித்து, பிக்ஷா பாத்திரம் பிடித்து ஸஞ்சாரம் செய்பவர் ஹம்ஸர்கள்.

ஒரே தண்டம் உள்ளவராக, கௌபீனதாரிகளாக, மதுகர-விருத்தியால் ஜீவிப்பவர்கள் பரம ஹம்ஸர்கள்.

[1] ஹம்ஸ, பரமஹம்ஸர்களுக்கு காயத்ரீ ஜபம் உண்டு. ஆனால், ஸந்த்யா வந்தனத்தின் அங்கமாக காயத்ரீ ஜபம் இல்லை. தேவ, ரிஷி, பித்ரு தர்ப்பணம், வைச்வதேவ, பலிஹரண, பஞ்சமஹா யக்ஞங்களும் இல்லை. இவ்விருவரும் 'நிஷ்கரிய யதிகள்'. ஹோமம் போன்ற க்ரியை அற்ற யதிகள். மற்ற இருவகை யதிகளுக்கும் கூட பித்ரு தர்ப்பணம் இல்லை. ஆனால் மூலமந்த்ர - அர்க்ய (பரமாத்மனுக்கு) தர்ப்பணம் உண்டு.

### பிரம்மசாரி தர்ம

३५. समित् होमो वटोश्चैव स्मृत्वा विष्णुं हुताशने।

**35. ஸமித் ஹோமோ வடோஸ்சைவ ஸ்ம்ருத்வா விஷ்ணும் ஹுதாசனே|**

**ஹுதாசனே**=யக்ஞ புருஷனில் **விஷ்ணும் ஸ்ம்ருத்வா** = பரசுராம என்னும் பகவானை ஸ்மரித்து **ஸமித்**

**ஹோம:** அக்னிகார்யம் செய்வது **வடோ:** பிரம்மசாரியின் விசேஷ தர்மம்.

३५. सर्व-वर्णाश्रमैः विष्णुः एक-एव इज्यते सदा॥ (३५)

**35. ஸர்வ-வர்ணாச்ரமை: விஷ்ணு: ஏகஏவ இஜ்யதே ஸதா|**

**ஸர்வ வர்ணாச்ரமை:** எல்லா வர்ணம், ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்கள் **ஸதா** = ஸந்த்யா முதலான எல்லா காரியங்களைச் செய்யும் போதும் **விஷ்ணு: ஏக ஏவ இஜ்யதே** = விஷ்ணுவையே முக்யமாக பூஜிக்கவேண்டும். எல்லா கர்மாக்களுக்கும் ஹரியே தேவதை.

३६. रमा ब्रह्मादयस्तस्य परिवारतयैव तु॥ (३६)

**36. ரமா ப்ரம்மாதயஸ்-தஸ்ய பரிவாரதயா ஏவ து||**

**ரமா, பிரம்மா முதலான தேவதைகளை தஸ்ய பரிவாரதயா** = பரமாத்மனின் அங்க தேவதைகள் என பூஜிக்கவேண்டும்.

### 'ஸந்த்யா' என்றால் பகவான்

அக்னிகார்யம் பிரம்மசாரிக்கு விசேஷ தர்மம். அது இங்கு கூறப்பட்டிருக்கிறது. இதை விஷ்ணு-ஸ்மரணையுடனேயே செய்யவேண்டும். எல்லா வர்ண மற்றும் ஆச்ரமிகள் ஸந்த்யா முதலான விஹித கர்மாக்களை முக்யமாக விஷ்ணு-பூஜை என்ற எண்ணத்திலேயே செய்ய வேண்டும். எல்லா கர்மாக்களுக்கும் ஹரியே தேவதை. 'ஸந்த்யா' என்னும் சொல் பரமாத்மாவின் பெயர்.

ஸந்தி-காலத்தில் உபாஸனை செய்யப்படவேண்டியவன், நன்றாகத் தியானிக்கப்பட வேண்டியவன் எவனோ

அவன் 'ஸந்த்யா' என்று பெயருள்ளவனாக இருக்கிறான். லக்ஷ்மீ, பிரம்மா முதலான தேவதைகளை அவனது பரிவாரம் (அல்லது அங்க தேவதை) என்று பூஜிக்கவேண்டும்.

परिवारतया ग्राह्या अपि हेया प्रधानत:

என்பது ஆசார்யரின் வாக்கு.

## ஸத்-கர்மி, ஸத்யோகிகள்

அவரவர் வர்ண, ஆச்ரமத்திற்கு உரிய எல்லா கர்மாக்களையும் முக்ய 'விஷ்ணு பூஜை' என்னும் எண்ணத்துடன் செய்பவர்கள் 'ஸத்கர்மிகள். பகவானைத் தவிர மற்ற தேவதைகளை பகவானின் பரிவார தேவதைகள் என்று புரிந்து கொண்டு அந்தந்த தேவர்களுக்குப் பூஜை செய்து கொண்டு ஹரிக்கு அர்ப்பணம் செய்வோர் ஸத்யோகிகள்.

விஷ்ணு அல்லாத இதர தேவதையை ஸ்வதந்த்ர தேவதை என்று நினைத்து பூஜிப்பவர்கள் செய்யும் கர்மாக்கள் பலனற்றுப் போகிறது.

**செயலுக்குரியவனை எண்ணி செயல்படுக.**

३७. कविं पुराणं अनुशासितारं
अणोरणीयांसं अनुस्मरेद् य: ।
सर्वस्य धातारं अचिन्त्य-रूपं
आदित्यवर्णं तमस: परस्तात् ॥ (३७)

**37. கவிம் புராணம் அனுசாஸிதாரம்**
**அணோரணீயாம்ஸம் அனுஸ்மரேத் ய: ।**
**ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்ய ரூபம்**
**ஆதித்ய-வர்ணம் தமஸ: பரஸ்தாத் ।**

**கவிம்**=எல்லாம் வல்ல. **புராணம்**=புராதனகாலத்தவனான. **அனுசாஸிதாரம்** = உலகுக்கெல்லாம் கட்டளை இடுபவனான. **அணோ:அணீயாம்ஸம்**=சூக்ஷ்மத்தைவிட அதிசூக்ஷ்மனான. **ஸர்வஸ்ய தாதாரம்**=எல்லா உலகத்தை யும் காப்பவனான. **அசிந்த்ய ரூபம்**=மனதுக்கும், வாக்குக் கும் முழுதும் எட்டாமல் சிறிதளவே தான் அறியப்படுபவ னும் எண்ணுதற்கறிய சக்திவாய்ந்தவனும். **ஆதித்ய வர் ணம்**=சூர்யனைப் போன்ற பிரகாசமுள்ள. **தமஸ: பரஸ் தாத்**=அக்ஞானத்திற்கு அப்பால் நின்று, பஞ்சபூதங்கள் எனப்படும் பிரக்ருதியின் கட்டுக்கு உட்படாதவனும், மர ணத்தையும் மீறிய அந்த பரமாத்மாவை. **அனுஸ்மரேத்**=எவர் எப்போதும் நினைவில் கொண்டிருப்பவரோ, அவர்கள் அந்த பரமாத்மனை அடைவர்.

## கர்த்தா நாம் அல்ல. ஸ்ரீஹரி

அன்றாடக் காரியங்களில் நாம் செயல்படும் போது ஸ்ரீஹரியை மனதில் நிறுத்தி, எக்காரியத்தையும் தொடங்க வேண்டும் என்று போதிக்கின்ற இந்த சுலோகத்தை, கீதை எட்டாவது அத்யாயத்தில் காணலாம். (சுலோ.9) **தமஸ்** என்றால் (1) பிரக்ருதி (2) அக்ஞானம் (3) மரணம் என்று மூன்று அர்த்தங்கள். **தமஸ: பரஸ்தாத்** என்றால் ஸ்ரீஹரி இம்மூன்றையும் மீறியவன்; இம்மூன்றுக்கும் உட்படாதவன் என்பது பொருள். **ஸர்வஸ்ய தாதாரம்** என்றால், லக்ஷ்மீ, பிரம்மா முதலான அனைத்து தேவர்களையும் காப்பாற்றுப வன் என்பது பொருள். ஆகவே, அவர்கள் இவனைச் சூழ்ந்து நிற்கும் பரிவார தேவர்கள் என்பது கருத்து.

**செயலுக்குக் காரணனான ஸ்ரீஹரியை நினைந்து நாம் செயலில் ஈடுபட்டால், அவனது பரிவார தேவர்களும் சேர்ந்து ஈடுபட்டு, காரியத்தின் நற்பய னுக்கு நம்மை ஆளாக்குவர் என்பது கருத்து.**

३८. वेदाहमेतं पुरुषं महान्तं
आदित्यवर्णं तमसस्तु पारे।
सर्वाणि रूपाणि विचित्य धीर:
नामानि कृत्वा अभिवदन्यदास्ते॥ (३८)

38. வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்ய-வர்ணம் தமஸஸ்து பாரே|
ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர:
நாமானி கிருத்வா அபி-வதன்-யதாஸ்தே|

**ஏதம்**=புருஷ-ஸூக்தத்தில் போற்றப்படுகின்ற **மஹாந்தம்**=முக்தி எய்தியவர்களுக்கும், இனி எய்துபவர்களுக்கும் ஈசன் என்னும் மஹிமை பொருந்திய, அனைத்து உலகத்திலும் உத்தமனான. **ஆதித்ய வர்ணம்**=சூரியனைப் போன்ற பிரகாச ரூபியான **தமஸ: பாரே**=பஞ்சபூதங்களான பிரக்ருதியின் கட்டுக்கு உட்படாத. **புருஷம்**=பூரணன் ஆன நாராயணனை **அஹம் வேத**=வேதபுருஷன்; அதாவது பூர்ண-ப்ரக்ஞாசார்யரான நான் அறிவேன். ஈசனின் அபரோக்ஷக் ஞானத்தை (நேர்முக தரிசனத்தைப்) பெற்றிருக்கிறேன். உங்கள் நன்மைக்காக இதை எடுத்துரைக்கிறேன் என்பது ஆசார்ய ஸ்ரீமத்வரின் அருள்வாக்கு. **தீர:**=நமது புத்தியில் நின்று விளையாடுகின்ற இந்த நாராயணன். **ஸர்வாணி ரூபாணி**=பிரம்மதேவர் முதலான உயிருள்ள சேதனர்களையும், மற்றும் மஹத் தத்வம் போன்ற ஜடப் பொருள்களையும் கூட. விசித்ய=சிருஷ்ட்டி செய்து, **நாமானி க்ருத்வா**=அவற்றிற்குப் பெயர்களைக் கொடுத்து. **அபிவதன் ஆஸ்தே**=செயல்படுத்திக் கொண்டிருக்கிறான்.

ஸ்ரீஹரி ஸர்வோத்தமன் என்பதைப் போற்றிப் புகழ்கின்ற 'தைத்திரீய' வேதச் சொல்லை இங்கு கூறுகிறார். இங்கு **அஹம்** என்பது வேத-புருஷனைக் குறிக்கின்றது.

அபரோக்ஷக்ஞானியான ஆசார்ய ஸ்ரீமத்வர் **'அஹம் வேத'** என்று கூறி, தாம் அபரோக்ஷக்ஞானி என்பதை இங்கு சூசனை செய்திருக்கிறார். **'தமஸஸ்து பாரே'** என்பதை, 'அக்ஞானம், ப்ரக்ருதி - பந்தம் மற்றும் மிருத்யுவை மீறிய' என்னும் மூன்று அர்த்தங்களையும் இங்கு மேற்கொள்ள வேண்டும்.

**ஸதாசாரத்திற்கு வேறு மார்க்கம் இல்லை.**

३९. धाता पुरस्ताद्-यं-उदाजहार
शक्रः प्रविद्वान् प्रदिश-श्चतस्रः ।
तमेवं विद्वान् अमृत इह भवति
नान्यः पन्था अयनाय विद्यते ॥ (३९)

**39. தாதா-புரஸ்தாத்-யமுதா-ஜஹார**
**சக்ரப்** (Shakrap) **ர-வித்வான் ப்ரதிசஸ்-சதஸ்ர:।**
**தமேவம் வித்வான் அம்ருத இஹ பவதி**
**நான்யப் பந்தா அயனாய வித்யதே॥**

**தாதா** (Dhata)= நான்முகப் பிரம்மதேவன். **புரஸ்தாத்**= ஆதிகாலத்தில். **யம் உதாஜஹார**=எந்த இப்புருஷனின் மேன்மையை உபதேசித்தாரோ, **ப்ரதிச:**=உயர்ந்த ஆசான் ஆன(குருவான) **சதஸ்ர: ப்ரவித்வான்**=அனிருத்த, ப்ரத்யும்ன, ஸங்கர்ஷண, வாஸுதேவ ஆகிய இந்த சதுர்மூர்த்திகளை அறிந்த. **சக்ர:** (Sakra)= இந்திரன். **யம் உதா ஜஹார** = எந்த இப்புருஷோத்தமனைப் போற்றுவரோ, **தம் ஏவம் வித்வான்** = இப்புருஷனின் மேன்மையை இவ்வாறு அறிந்தவன், (அதாவது சிரவணம், மனனம், தியானத்தின் மூலம் அவனை நேரில் கண்டு — அபரோக்ஷக்ஞானத்தைப் பெற்றவன்)**இஹ**=இப்படிச் சாதனை செய்து முன்னேறி **அம்ருதம் பவதி** = முக்தி எய்துவான். (அபரோக்ஷக்

ஞானத்தினால் பகவத்-பிரஸாதத்தைப் பெற்று முக்தி எய்து வான்) **அயனாய** = மோக்ஷத்தை அடைவதற்கு **அன்ய: பந்தா**=வேறு மார்க்கம் (அதாவது; அபரோக்ஷக் ஞானத்தின் மூலம் பெற்ற ஈசனருளைத் தவிர வேறு மார்க்கம்) **ந வித்யதே**=கிடையாது.

இந்திரனுக்கு அடை மொழிகளாக நிற்பவை இவ்வி ரண்டு வார்த்தைகள்:-**ப்ரதிச:** மற்றும் **சதஸ்ர: ப்ரவித் வான்.** இவற்றின் பொருளை மேலே காண்க.

**மற்றொரு அர்த்தம்** இந்திரனைக் குறிக்கும் இவ்வ டைமொழிகளுக்கு மாற்றுப் பொருளும் கூறுவர்:- **சதஸ்ர: ப்ரதிச:**= நான்கு திக்குகளையும், நான்கு திக்குகளிலும் உள்ள பதார்த்தங்களையும், **ப்ரவித்வான்** = நன்கு அறிந்தவ னான. **சக்ர:** (Sakra)= இந்திரன், அதாவது அனைத்து வஸ்துக் களைப் பற்றியும் நன்கு அறிந்தவனான இந்திரன், இந்த பரம புருஷனின் (பரமாத்மாவின்) மேன்மையை உபதேசித் திருக்கிறான். இப்படி, நான்முகப் பிரம்மன், இந்திரன் முதலான ஞானிகள் நாராயணனின் மேன்மையைப் போற்றி யிருக்கும் வேத வாக்கியங்களை இங்கு ஸ்ரீமத்வர் மேற் கோள் காண்பித்திருக்கிறார். வாழ்க்கையில் இக்கருத்தை மறக்காமல், உள்நோக்குடன் வேலைகளில் செயல்படுவது 'ஸதாசார-நினைவு அல்லது ஸ்ம்ருதி' ஆகும்.

### மங்களகரமான நூல்

४०. आनन्दतीर्थमुनिना व्यास-वाक्य-समुद्-धृति: ।
सदाचारस्य विषये कृता संक्षेपत: शुभा ॥ (४०)

**40. ஆனந்த தீர்த்த முனினா வ்யாஸ-வாக்ய ஸமுத்-த்ரிதி: ।**
**ஸதாசாரஸ்ய விஷயே க்ருதா ஸங்க்ஷேபத: சுபா ॥**

**ஆனந்ததீர்த்த முனினா:** ஸ்ரீ மத்வாசார்யரால். ('தீர்த்த' என்றால், சாஸ்திர நூல்களை இயற்றியவர் என்பது பொருள். ஆனந்த ரூபியான பரம்பொருளைப் போற்றிப்பாடும் சாஸ்திரங்களை இயற்றியமையால் இவருக்கு 'ஆனந்த தீர்த்தர்' என்பது காரணப் பெயர்). ஆனந்த தீர்த்தர் என்னும் முனிவரால் **ஸதாசாரஸ்ய விஷயே**=நல்வாழ்க்கைக் கோட்பாடுகள் என்னும் விஷயத்தில் **வியாஸ-வாக்ய-ஸமுத்-த்ரிதி:**=வேதவ்யாஸரது அருஞ்சொற்களின் ஸாரம் இச்சிறு நூலில் **ஸங்க்ஷேபத:**=சுருக்கமாகவும், **சுபா க்ருதா**=மங்கள கரமாகவும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**ஆனந்த தீர்த்தர்** என்னும் சொல்லுக்கு இரு பொருள்கள் உண்டு

(१) आनन्दरूपस्य हरे:,तीर्थ-शास्त्रं, येन कृतं, स:-आनन्दतीर्थ: ॥

(२) आनन्दरूपा मोक्ष-साधनं वा शास्त्रं, येन कृतं, स:- आनन्दतीर्थ:।

1. ஆனந்தரூபியான பரம்பொருளைப் போற்றிப் புகழ்ந்து பாடுகிற சாஸ்திரங்களை இயற்றியவர் ஆனந்த தீர்த்தர்.

2. ஆனந்தரூபியான மோக்ஷத்தை அடைவதற்கு வழிமுறைகளைத் தெரிவித்து அறிவூட்டும் சாஸ்திரங்களை இயற்றியவர் ஆனந்ததீர்த்தர்.

இம்மையிலும், மறுமையிலும் இன்பத்தை அளிக்கும் வாழ்க்கைமுறை அல்லது ஆசாரம் **'ஸதாசாரம்'.** ஸதாசார முறைகளைக் கூறி, அவற்றை நினைவில் இருக்கச் செய்யும் நன்னூல் **'ஸதாசார ஸ்ம்ருதி'.**

## ஸ்ரீஹரியின் நினைவு மங்களகரம்

பகவத் கீதையில் காணும் ஸ்ரீவியாஸரது வாக்கியத்தின் ஸாரம் இந்நூலில் அடங்கியிருக்கிறது. விஷ்ணுவை

நினைத்து அனைத்து நற்செயல்களையும் தொடங்கவேண்டும் என்னும் உபதேசம் இந்நூலில் அடங்கியிருப்பதினால் இது மங்களகரமான நூல் ஆகிறது.

## புருஷோத்தமனுக்கு அர்ப்பணம்

४१. अशेष - कल्याण - गुण - नित्यानुभव - सत्तनुः।
अशेष-दोष-रहितः प्रीयतां पुरुषोत्तमः॥ (४१)

**इति श्री आनन्दतीर्थविरचिता सदाचारस्मृतिः संपूर्णा॥**

**41. அசேஷ கல்யாண - குண - நித்யானுபவ - ஸத் - தனு: ।**
**அசேஷ - தோஷ - ரஹித: ப்ரீயதாம் புருஷோத்தம: ॥**

ஸ்ரீ ஆனந்ததீர்த்தர் இயற்றி அருளிய ஸதாசார-ஸ்ம்ருதி முற்றிற்று.

முதல் வரியின் பொருள்:- எண்ணிலடங்காத கல்யாணகுணங்களே உடல் உருவத்தில் நிற்கின்றவனும், **அசேஷதோஷ ரஹித:**=சுதந்திரமின்மை போன்ற எந்த தோஷமும் அற்றவனும், 'க்ஷர', 'அக்ஷர' புருஷர்களைக் காட்டிலும் உத்தமன் எனப் போற்றப்படுபவனுமான **ஸ்ரீ புருஷோத்தமன். ப்ரீயதாம்**=மனம் உவந்து எனது இந்த ச் சேவையை ஏற்றுக் கொள்வோனாக என்கிறார் ஸ்ரீ ஆசார்யர்.

பாரதீரமண முக்யப்ராணாந்தர்கத
ஸ்ரீ லக்ஷ்மீ வேங்கடேசப் பெருமானின் அனுக்ரஹத்தினால் Prof. K.T.பாண்டுரங்கி அவர்களால் கன்னடத்தில் இயற்றப்பட்டு, ஸ்ரீ முஷ்ணம் V. நாகராஜாசார் அவர்களால் தமிழாக்கம் செய்யப்பட்ட **'ஸதாசார ஸ்ம்ருதி'** முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

# सदाचारस्मृतिः

यस्मिन् सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो याति परं जयति सोऽच्युतः ॥ १ ॥

स्मृत्वा विष्णुं समुत्थाय कृतशौचो यथाविधि ।
धौतदन्तः समाचम्य स्नानं कुर्याद्विधानतः ॥ २ ॥

उद्धृतेति मृदाऽऽलिप्य द्विषडष्टषडक्षरैः ।
त्रिर्निमज्ज्याऽप्यसूक्तेन प्रोक्षयित्वा पुनस्तथा ॥ ३ ॥

मृदाऽऽलिप्य निमज्य त्रिः त्रिर्जपेदघमर्षणम् ।
स्रष्टारं सर्वलोकानां स्मृत्वा नारायणं परम् ॥ ४ ॥

यतश्वासो निमज्याऽप्सु प्रणवेनोत्थितस्ततः ।
सिञ्चेत् पुरुषसूक्तेन स्वदेहस्थं हरिं स्मरन् ॥ ५ ॥

वसित्वा वास आचम्य प्रोक्ष्याऽचम्य च मन्त्रतः ।
गायत्र्या चाञ्जलिं दत्वा ध्यात्वा सूर्यगतं हरिम् ॥ ६ ॥

मन्त्रतः परिवृत्याथ समाचम्य सुरादिकान् ।
तर्पयित्वा निपीड्याथ वासो विसृत्य चाञ्जसा ॥ ७ ॥

अर्कमण्डलगं विष्णुं ध्यात्वैव त्रिपदीं जपेत् ।
सहस्रपरमां देवीं शतमध्यां दशावराम् ॥ ८ ॥

# ஸதாசார ஸ்ம்ருதி :

1. யஸ்மின் ஸர்வாணி கர்மாணி ஸன்யஸ்ய அத்யாத்ம - சேதஸா।
2. ஸ்ம்ருத்வா விஷ்ணும் ஸமுத்தாய க்ருத சௌசோ யதா விதி।
தௌத-தந்த: ஸமாசம்ய ஸ்நானம் குர்யாத் விதானத:॥
3. உத்ரிதேதி ம்ருதாலிப்ய த்வி-ஷட், அஷ்ட்ட, ஷடக்ஷரை:।
த்ரி: நிமஜ்ய - ஆப்ய - ஸூக்தேன ப்ரோக்ஷயித்வா புனஸ்ததா॥
4. ஸ்ரஷ்ட்டாரம் ஸர்வ - லோகானாம் ஸ்ம்ருத்வா நாராயணம் பரம்॥
5. யத: ஸ்வாஸோ நிமஜ்யாப்ஸு ப்ரணவனே உத்தி தஸ் தத:।
6. வஸித்வா - வாஸ - ஆசம்ய ப்ரோக்ஷ்ய-ஆசம்ய ச மந்த்ரத:।
காயத்ர்யா ச அஞ்ஜலிம் தத்வா த்யாத்வா ஸூர்ய கதம் ஹரிம்॥
7. மந்த்ரத: பரிவ்ருத்யாத ஸமாசம்ய ஸுராதிகான்।
தர்ப்பயித்வா நிபீட்யாத வாஸோ விஸ்த்ருத்ய ச அஞ்ஜஸா॥
8. அர்க்க மண்டலகம் விஷ்ணும் த்யாத்வைவ த்ரி-பதீம் ஜபேத்।
ஸஹஸ்ர பரமாம் தேவீம் சதமத்யாம் தசா-வராம்॥

आश्चर्यदर्शनात्तिष्ठेत् ततस्तूपविशेत वा । 61-A
पूर्वां सन्ध्यां सनक्षत्रामुत्तरां सदिवाकराम् ॥ ९ ॥

उत्तरामुपविश्यैव वाग्यतः सर्वदा जपेत् ।

ध्येयः सदा सवितृमण्डलमध्यवर्ती
नारायणः सरसिजासनसन्निविष्टः ।
केयूरवान् मकरकुण्डलवान् किरीटी
हारी हिरण्मयवपुर्धृतशङ्खचक्रः ॥ १० ॥

गायत्र्याः त्रिगुणं विष्णुं ध्यायन्नष्टाक्षरीं जपेत् ।
प्रणम्य देवान् विप्रांश्च गुरूंश्च हरिपार्षदान् ॥ ११ ॥

एवं सर्वोत्तमं विष्णुं ध्यायन्नेवार्चयेद्धरिम् ।
ध्यानप्रवचनाभ्यां च यथायोग्यमुपासनम् ॥ १२ ॥

धर्मेणेज्यासाधनानि साधयित्वा विधानतः ।
स्नात्वा संपूजयेद्विष्णुं वेदतन्त्रोक्तमार्गतः ॥ १३ ॥

वैश्वदेवं बलिं चैव कुर्यान्नित्यं तदर्पणम् ।
इष्टं दत्तं हुतं जप्तं पूर्तं यच्चात्मनः प्रियम् ॥ १४ ॥

दारान् सुतान् प्रियान् प्राणान् परस्मै सन्निवेदयेत् ।
भुक्तशेषं भगवतो भृत्यातिथिपुरस्सरः ॥ १५ ॥

भुञ्जीत हृद्गतं विष्णुं स्मरंस्तद्गतमानसः ।
आचम्य मूलमन्त्रेण कोष्ठं समभिमन्त्रयेत् ॥ १६ ॥

9. ஆ-ஸௌர்ய-தர்சனாத் திஷ்ட்டேத் ததஸ்து உபவி
சேத வா|
பூர்வாம் ஸந்த்யாம் ஸ-நக்ஷத்ராம் உத்தராம் ஸ-
திவாகராம்||

10. உத்தராம் உபவிச்யைவ வாக்யத: ஸர்வதா ஜபேத்|

10. த்யேயஸ் ஸதா ஸவித்ரு-மண்டல மத்யவர்த்தீ
நாராயண: ஸரஸி-ஜாஸன ஸன்னி-விஷ்ட்ட: |
கேயூரவான் மகர குண்டலவான் கிரீடீ
ஹாரீ ஹிரண்மய-வபு: த்ருத சங்க சக்ர: ||

11. காயத்ர்யா:த்ரி-குணம் விஷ்ணும் த்யாயன்
அஷ்டாக்ஷரீம் ஜபேத்|
ப்ரணம்ய தேவான் விப்ரான்ஸ்ச, குரூன்ஸ்ச |
ஹரி-பார்ஷதான் ||

12. ஏவம் ஸர்வோத்தமம் விஷ்ணும் த்யாயன்னேவ
அர்ச்சயேத் ஹரிம் |

12. த்யான-ப்ரவசனாப்யாம் ச யதா யோக்யம் உபாஸ
னம் ||

13. தர்மேண இஜ்யா ஸாதநானி ஸாதயித்வா விதா
னத:|
ஸ்நாத்வா ஸம்பூஜயேத் விஷ்ணும் வேத
தந்த்ரோக்த மார்கத:||

14. வைச்வதேவம் பலிம் Chaiva குர்யாத், நித்யம்
ததர்ப்பணம்

वेदशास्त्रविनोदेन प्रीणयन् पुरुषोत्तमम् ।
अहःशेषं नयेत् सन्ध्यामुपासीताथ पूर्ववत् ॥ १७ ॥

यामात्परत एवाथ स्वपेद् ध्यायञ्जनार्दनम् ।
अन्तराले ततो बुद्ध्वा स्मरेत बहुशो हरिम् ॥ १८ ॥

कायेन वाचा मनसेन्द्रियैर्वा
बुद्ध्याऽऽत्मना वाऽनुसृतः स्वभावम् ।
करोमि यद्यत् सकलं परस्मै
नारायणायेति समर्पयेत्तत् ॥ १९ ॥

द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥ २० ॥

उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ २१ ॥

यस्मात् क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ २२ ॥

यो मामेवमसम्मूढो जानाति पुरुषोत्तमम् ।
स सर्वविद्भजति मां सर्वभावेन भारत ॥ २३ ॥

इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयाऽनघ ।
एतद् बुद्ध्वा बुद्धिमान् स्यात्कृतकृत्यश्च भारत ॥ २४ ॥

இஷ்ட்டம், தத்தம், ஹுதம், ஜப்தம், பூர்த்தம்
யச்ச ஆத்மன: ப்ரியம்||

15. தாரான் ஸுதான் ப்ரியான் ப்ராணான் பரஸ்மை
ஸன்னிவேதயேத்|

15. புக்த-சேஷம் பகவத: ப்ருத்ய-அதிதி-புரஸ்ஸர:|

16. புஞ்ஜீத ஹ்ருத்-கதம் விஷ்ணும் ஸ்மரன் தத்கத-
மானஸ:
ஆசம்ய மூலமந்த்ரேண கோஷ்டம் ஸமபி மந்த்ர
யேத்||

17. வேதசாஸ்த்ர-விநோதேன ப்ரீணயன் புருஷோத்த
மம்|
அஹஸ்-சேஷம் நயேத் ஸந்த்யாம் உபாஸீத அத
பூர்வ-வத்|

18. யாமாத் பரத ஏவாத ஸ்வபேத் த்யாயன்
ஜனார்தனம்|
அந்தராலே ததோ புத்வா ஸ்மரேத பஹுசோ
ஹரிம்||

19. காயேன-வாசா மனஸேந்த்ரி-யைர் வா
புத்யாத்மனா வா அனுஸ்ருத: ஸ்வபாவம்|
கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை
நாராயணா-யேதி, ஸமர்ப்பயேத் தத்||

20. த்வௌ இமௌ புருஷௌ லோகே க்ஷரஸ்ச
அக்ஷர ஏவ ச|
க்ஷரஸ் ஸர்வாணி பூதானி கூடஸ்த: அக்ஷர

रुद्रं समाश्रिता देवा रुद्रो ब्रह्माणमाश्रितः । 63-A
ब्रह्मा मामाश्रितो नित्यं नाहं कश्चिदुपाश्रितः ॥ २५ ॥

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥ २६ ॥

ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।
सर्वज्ञानविमूढांस्तान् विद्धि नष्टानचेतसः ॥ २७ ॥

द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च ।
विष्णुभक्तिपरो दैवो विपरीतस्तथाऽऽसुरः ॥ २८ ॥

स्मर्तव्यः सततं विष्णुः विस्मर्तव्यो न जातुचित् ।
सर्वे विधिनिषेधाः स्युरेतयोरेव किङ्कराः ॥ २९ ॥

धर्मो भवत्यधर्मोऽपि कृतो भक्तैस्तवाच्युत ।
पापं भवति धर्मोऽपि यो न भक्तैः कृतो हरेः ॥ ३० ॥

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
नित्यं भवेच्च मन्निष्ठो बुभूषुः पुरुषस्तथा ॥ ३१ ॥

एष नित्यः सदाचारो गृहिणो वनिनस्तथा ।
वैश्वदेवं बलिं दन्तधावनं चाप्यृते वटोः ॥ ३२ ॥

एवमेव यतेः स्वीयवित्तेन तु विना सदा ।
मूलमन्त्रैः सदा स्नानं विष्णोरेव च तर्पणम् ॥ ३३ ॥

உச்யதே||

21. உத்தம: புருஷஸ்து அன்ய: பரமாத்மா இதி உதாஹ்ருத:|
யோ லோக-த்ரயம் ஆவிச்ய பிபர்த்தி அவ்யய ஈச்வர: ||

22. யஸ்மாத் க்ஷரம் அதீதோஹம் அக்ஷராதபி ச உத்தம: |
அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ||

23. யோ மாம் ஏவம் அஸம்மூடோ ஜானாதி புருஷோத்தமம்|
ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வ-பாவேன பாரத||

24. இதி குஹ்யதமம் சாஸ்த்ரம் இதம் உக்தம் மயா அனக|
ஏதத் புத்வா புத்திமான் ஸ்யாத் க்ருத-க்ருத்யஸ்ச பாரத||

25. ருத்ரம் ஸமாச்ரிதா தேவா: ருத்ரோ ப்ரம்மாணம் ஆச்ரித:|
ப்ரம்மா மாமாச்ரிதோ நித்யம் நாஹம் கஞ்சித் உபாச்ரித:||

26. யே மே மதம் இதம் நித்யம் அனு-திஷ்ட்டந்தி மானவா: |
ச்ரத்தா-வந்த: அனஸூயந்த: முச்யந்தே தேபி கர்மபி: ||

27. யே து ஏதத் அப்யஸூயந்தோ ந அனுதிஷ்டந்தி மானவா: |
ஸர்வ-க்ஞான விமூடான் தான் வித்தி நஷ்டான் அசேதஸ: ||

28. த்வௌ பூத - ஸர்கௌ லோகே அஸ்மின், தைவ ஆஸுர ஏவ ச|
விஷ்ணுபக்தி-பர: தைவோ, விபரீத: ததா ஆஸுர: ||

29. ஸ்மர்த்தவ்ய: ஸததம் விஷ்ணு: விஸ்மர்த்தவ்யோ ந ஜாதுசித்|
ஸர்வே விதி நிஷேதா: ஸ்யு: ஏத யோரேவ கிங்கரா:||

30. தர்மோ பவதி அதர்மோऽபி க்ருதோ பக்தை: தவாச்யுத|
பாபம் பவதி தர்மோऽபி யோ ந பக்தை: க்ருதோ ஹரே:||

31. மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு|
நித்யம் பவேத் ச மன்நிஷ்ட: புரூஷு:| புருஷஸ் ததா||

32. ஏஷ நித்ய: ஸதாசாரோ க்ரிஹிணோ வனினஸ்-ததா|
வைச்வ தேவம் பலிம் தந்த தாவனம் சாபி (Chaa) ரிதே வடோ:||

33. ஏவமேவ யதே: ஸ்விய வித்தேன து வினா ஸதா|
மூல மந்த்ரை: ஸதா ஸ்நானம் விஷ்ணோரேவ
ச தர்ப்பணம்|

34. விசேஷோ நிஷ்க்ரிய யதே: அஜலாஞ்-ஜலிதா
ததா|
தர்ப்பணம் து ஹரே-ரேவ யதே: அன்யஸ்ய
சோதிதம்||

35. ஸமித் ஹோமோ வடோஸ்சைவ ஸ்ம்ருத்வா
விஷ்ணும் ஹுதாசனே|

36. ரமா ப்ரம்மாதயஸ்-தஸ்ய பரிவாரதயா ஏவ து||

37. கவிம் புராணம் அனுசாஸிதாரம்
அணோரணீயாம்ஸம் அனுஸ்மரேத் ய: |
ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்ய ரூபம்
ஆதித்ய-வர்ணம் தமஸ: பரஸ்தாத் |

38. வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்ய-வர்ணம் தமஸஸ்து பாரே|
ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர:
நாமானி கிருத்வா அபி-வதன்-யதாஸ்தே|

39. தாதா-புரஸ்தாத்-யமுதா-ஜஹார
சக்ரப் (Shakrap) ர-வித்வான் ப்ரதிசஸ்-சதஸ்ர:
தமேவம் வித்வான் அம்ருத இஹ பவதி
நான்யப் பந்தா அயனாய வித்யதே||

40. ஆனந்த தீர்த்த முனினா வ்யாஸ-வாக்ய ஸமுத்-
த்ரிதி: ।
ஸதாசாரஸ்ய விஷயே க்ருதா ஸங்க்ஷேபத: சுபா ॥

41. அசேஷ கல்யாண - குண - நித்யானுபவ -
ஸத் - தனு: ।
அசேஷ - தோஷ - ரஹித: ப்ரீயதாம் புருஷோத்
தம: ॥

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

विशेषो निष्क्रिययतेरजलाञ्जलिता तथा ।
तर्पणं तु हरेरेव यतेरन्यस्य चोदितम् ॥ ३४ ॥

समिद्धोमो वटोश्चैव स्मृत्वा विष्णुं हुताशने ।
सर्ववर्णाश्रमैर्विष्णुरेक एवेज्यते सदा ॥ ३५ ॥

रमाब्रह्मादयस्तस्य परिवारतयैव तु ॥ ३६ ॥

कविं पुराणमनुशासितार-
मणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिन्त्यरूप-
मादित्यवर्णं तमसः परस्तात् ॥ ३७ ॥

वेदाहमेतं पुरुषं महान्त-
मादित्यवर्णं तमसस्तु पारे ।
सर्वाणि रूपाणि विचित्य धीरो
नामानि कृत्वाऽभिवदन्यदास्ते ॥ ३८ ॥

धाता पुरस्ताद्यमुदाजहार
शक्रः प्रविद्वान् प्रदिशश्चतस्रः ।
तमेवं विद्वानमृत इह भवति
नान्यः पन्था अयनाय विद्यते ॥ ३९ ॥

आनन्दतीर्थमुनिना व्यासवाक्यसमुद्धृतिः ।
सदाचारस्य विषये कृता सङ्क्षेपतः शुभा ॥ ४० ॥

अशेषकल्याणगुणनित्यानुभवसत्तनुः ।
अशेषदोषरहितः प्रीयतां पुरुषोत्तमः ॥ ४१ ॥

इति श्री आनन्दतीर्थविरचिता सदाचारस्मृतिः सम्पूर्णा

|| ஸ்ரீ: ||

# ஸ்நான க்ரமம்

நதி (அல்லது புஷ்கரிணி) ஜலத்தில் கால் வைப்பதற்கு முன்னால், கையினால் ஜலத்தை தலையில் புரோக்ஷணம் செய்துகொள்ளுதல். புஷ்கரிணியாக இருந்தால், ஜலத்தில் இறங்கி, கிழக்கு அல்லது வடக்கு திசை நோக்கி நீரில் மூழ்கி கைகூப்பி நின்று கொள்ளுதல்.

நதியாக இருந்தால், ஜலத்தில் இறங்கி ஜலம் வரும் திசையை நோக்கி கைகூப்பி நின்றுகொண்டு நீரில் மூழ்கி எழுந்து, கிழக்கு அல்லது வடக்கு திக்கு நோக்கி நின்று, ஜலத்தாலேயே நெற்றி நாமம் இட்டுக்கொண்டு, ஆசமனம், ஸங்கல்பம்.

## ஸங்கல்பம்

1. ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம் தப: ஓம் ஸத்யம் ஓம் தத் ஸவிதுர் வரேண்யம், பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந: ப்ர-சோதயாத்.

2. ஓம் ஆபோ ஜ்யோதி ரஸோ அம்ருதம் பிரம்ம பூர், புவஸ், ஸுவரோம்.

3. சுபே சோபன முஹூர்த்தே, ஆத்ய பிரம்மண: த்விதீய பரார்த்தே, ஸ்ரீ ஸ்வேத வராஹ கல்பே, வைவஸ்வத மன்வந்தரே, கலியுகே, பிரதம-பாதே, பரத வர்ஷே

பரத கண்டே, ஜம்பூ த்வீபே, தண்டகாரண்யே கோதாவர்யா: தக்ஷிணே தீரே, சாலீவாஹன சகே, பௌத்தாவதாரே, ராமக்ஷேத்ரே, அஸ்மின்-வர்த்தமானே, .... நாம ஸம்வத்ஸரே, தக்ஷிணாயனே (அல்லது) உத்தராயணே....ரிதௌ....மாஸே. ..பக்ஷே ....திதௌ, வாஸர:....வாஸர யுக்தாயம், சுப திதௌ.

கைகூப்பி இந்த வசனங்களைச் சொல்லவும் :-

4. அஸ்யாம் மஹா நத்யாம், காவேர்யாம் (அல்லது) எந்த நதியோ அதன் பெயர் பூர்வ வாஹின்யாம்.

(புஷ்கரிணியாக இருந்தால் அதன் பெயர் சொல்லி புஷ்கரிண்யாம்)

ஸாலக்ராம சக்ராங்கித ஸ்ரீ விஷ்ணு-வைஷ்ணவ ஸன்னிதௌ. க்ஷேத்ர மூர்த்தி ஸ்ரீ ரங்கநாதஸ்வாமி (அல்லது அந்த ஊர் ஸ்வாமி) ஸன்னிதௌ.

5. ஸ்ரீ அச்வத்த நாராயணஸ்வாமி ஸன்னிதௌ, சாயா ஸமேத ஸ்ரீ ஸூர்ய நாராயணஸ்வாமி ஸன்னிதௌ.

6. அஸ்மத் ஆதி குரூணும், பரம குரூணும், ஸ்ரீமத் ஆனந்த தீர்த்த பகவத் பாதாசார்யாணும், அந்தர்யாமி ஸீதாபதி ஸ்ரீ ராமசந்த்ர ப்ரீத்யர்த்தம்

காவேரி (அல்லது எந்த தீர்த்தமோ அதன் பெயரைச் சொல்லி) ஸ்னானம் ஹரிஷ்யே.
**என்று சொல்லி ஜலம் வரும் திசையை நோக்கி திரும்பி நின்று கை கூப்பி பிரார்த்தனை :-**

## பிரார்த்தனை

7. தீர்த்த ராஜாய நம:
த்வம் ராஜா ஸர்வ தீர்த்தானும் த்வமேவ ஜகதப்பிதா
யாசிதம் தீர்த்தமே தேஹி ஸர்வபாப ஹரோபவ ||

8, ஸமஸ்த ஜகதா-தார, சங்க சக்ர கதா-தர, தேவ தேஹி மமா-னுக்ஞாம் யுஷ்மத் தீர்த்த நிஷேவணே ||

9. யோஸௌ ஸர்வகதோ விஷ்ணு: சித் ஸ்வ ரூபீ நிரஞ்ஜன: । ஸ ஏவ த்ரவ ரூபேண கங்காம்போ நாத்ர ஸம்சய: ॥

10. கங்கா, கங்கேதி யோ ப்ரூயாத் யோஜனானாம் சதைரபி । முச்யதே ஸர்வ பாபேப்ய: விஷ்ணு லோகம் ஸ கச்சதி ॥

11. கங்கே ச யமுனே சைவ (chaiva) கோதாவரி ஸரஸ்வதி । நர்மதே ஸிந்து காவேரீ ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு ॥

என்று சொல்லிக்கொண்டு மூழ்கி ஸ்னானம்.

## ஸ்னான-அங்க தர்ப்பணம்

ஸ்னானம் செய்து உடம்பு துவட்டிக்கொள்வதற்கு முன்னாலேயே (ஜலத்தில் இருந்துகொண்டே) தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும், வெறும் நீரினால் தர்ப்பணம் கொடுக்கவேண்டும். (இரு கைகளால் அர்க்யம்)

## தேவ-தர்ப்பணம் (ஸவ்யம்)

1. ப்ரம்மாதயோ யே தேவா:
தாம்ஸ்தேவான் ஸ்தர்ப்பயாமி

2. (Bhoor) பூர்தேவான் ஸ்தர்ப்பயாமி

3. (Bhu) புவர் தேவான் ,,

4. ஸுவர் ,, ,,

5. பூர்-புவஸ்-ஸுவர் தேவான் ஸ்தர்ப்பயாமி

## ரிஷி தர்ப்பணம்

பூணூலை வனமாலிகை (மாலை போல) செய்துகொண்டு ரிஷிகளுக்கு அர்க்யம். ரிஷிகளுக்கு அர்க்யம் கொடுக்கும் போது கட்டை விரலை மேல்நோக்கி வைத்துக்கொண்டு,

நான்கு விரல்களையும் கொஞ்சம் மடக்கியதுபோல் வைத்துக் வைத்துக்கொண்டு (உள்ளங்கை வழியாகவே) ஜலத்தை விடவேண்டும். இதை ரிஷி தீர்த்தம் என்பார்கள்.

1. க்ருஷ்ண த்வைபாயனுதய: யே ரிஷய: தான் ரிஷீன்ஸ் தர்ப்பயாமி
2. பூர்-ரிஷீன்ஸ் தர்ப்பயாமி
3. புவர் ,, ,,
4. ஸுவர் ,, ,,
5. பூர்-புவ-ஸ்ஸுவர் ரிஷீன்ஸ் தர்ப்பயாமி

## பித்ரு தர்ப்பணம் (அபஸவ்யம்)

பூணூலை ப்ராசீனு-வீதி (வலதுபுறம் தோளுக்கு மாற்றிக் கொண்டு) பித்ருக்களுக்கு அர்க்யம். ஜலம் கட்டை விரல் வழியாக விடவேண்டும். இதை பித்ரு தீர்த்தம் என்பார்கள்.

1. ஸோமப் - பித்ருமான்-யமோங்கிரஸ் வான் அக்னி ஷ்வாத்தா: கவ்ய வாஹனுதயோ யே பிதர: தான் பித்ரூன்ஸ் தர்ப்பயாமி
2. பூ: பித்ரூன்ஸ் தர்ப்பயாமி
3. புவ: ,, ,,
4. ஸுவ: ,, ,,
5. பூர்-புவ-ஸ்ஸுவ: பித்ரூன்ஸ் தர்ப்பயாமி

பூணூலை ஸவ்யம் செய்துகொண்டு ஆசமனம். தலை துவட்டிக்கொள்வதற்கு முன்னுல், துணியைப் பிழியும்போது, இந்த மந்திரம் சொல்லி (வாஸோதகம் அளித்தல்) துணியைப் பிழியவும்.

## வாஸோதகம்†

6. யே கே ச அஸ்மத் குலே ஜாதா:
அபுத்ரா: கோத்ரிணே ம்ருதா: ।
தே க்ருண்ஹந்து மயா தத்தம்
வஸ்த்ர நிஷ்பீடனோதகம் ॥

† வஸ்திரத்திலிருந்து விழும் நீர் வாஸோதகம்.

